


# சின்னஞ் சிறு வயதில்










அழ. வள்ளியப்பா






தமிழ்நாடு அரசினர் பரிசு பெற்றது

குழந்தைக் கவிஞர்

அழ. வள்ளியப்பா

விற்பனை உரிமை:

பாரி நிலையம்

பிராட்வே, சென்னை-1.

Chinnan-Chiru Vayathil

Author : Al. Valliappa
Illustrator : Sagar
Publisher : Kulandai Puthaka Nilayam, Madr
Sole Distributor : Paari Nilayam, Madras-1
Printer : South India Press, Karaikudi

Ninth Edition : March 1981
Price : Rs. 3/00

விலை ரூ. 3.00

வெளியீட்டோர் :

குழந்தைப் புத்தக நிலையம்

சென்னை - 17

# பதிப்புரை

பெரியோரது வாழ்க்கை வரலாற்றைத் தெரிந்து கொள்வதே ஓர் இன்பம். அவர்களது இளமைப் பருவத்தைத் தெரிந்து கொள்வதோ அதைவிட இன்பம்.

இந்தப் புத்தகத்தில் முப்பத்தெட்டு உலகப் பெரியார்களின் இளமைப் பருவத்தைக் காணலாம். ஒவ்வொருவருடைய இளமையிலும் நடந்த ஒவ்வொரு சுவையான நிகழ்ச்சியை எளிய நடையில் அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறார் ஆசிரியர். புதுப்புது முயற்சிகளில் ஈடுபட்டுக் குழந்தை உலகுக்கு அருந் தொண்டாற்றிவரும் ஆசிரியருக்கு எங்கள் நன்றி.

— குழந்தைப் புத்தக நிலையத்தார்

## பொருளடக்கம்

# 1 பொம்மை நாடகம்

அப்பா செருப்புத் தைப்பவர்; அம்மா துணி வெளுப்பவள். அவர்களுக்கு ஒரு பையன். அவன் பள்ளிக் கூடத்துக்கு ஒழுங்காகப் போகமாட்டான். அப்படியே போனாலும், பாடங்களைச் சரியாகக் கவனிக்கமாட்டான். எப்போதும், ஏதாவது கனவு கண்டுகொண்டேயிருப்பான்.

அவன் அப்பாவுக்கு அவனிடத்திலே பிரியம் அதிகம். அவர் அவனுக்குப் பொம்மை நாடகமேடை ஒன்றைச் செய்து கொடுத்தார். அதில் அந்தப் பையன் சில பொம்மைகளை நிறுத்திவைப்பான். சும்மா நிறுத்தி வைக்க மாட்டான்; அலங்காரமான உடுப்புகளுடனே நிறுத்தி வைப்பான்; தையற்கடையில் கிடைக்கும் துண்டுத் துணிகளைக்கொண்டே மேல் சட்டை, கால் சட்டை, தொப்பி முதலியவற்றைத் தயார் செய்து பொம்மை களுக்குப் போடுவான்.

அவன் தயாரிக்கும் உடைகள் மிகவும் அழகாயிருக்கும். அவனுடைய தையல் வேலையைப் பார்த்து, 'நம்முடைய மகன் பெரியவனானதும், ஒரு பெரிய தையற்காரன் ஆகி விடுவான்' என்று அம்மா நினைத்தாள். ஆனால், அவள் நினைத்தபடி நடக்கவில்லை.

அந்தப் பையன் பொம்மைகளை வைத்துத் தினமும் நாடகம் நடத்துவான். மேடையில் நிற்கும் பொம்மைகள் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு நடிகராக நினைத்துக் கொள்வான். அந்த நடிகர்களுக்குத் தகுந்தபடி நாடகம் வேண்டாமா? உடனே, அவன் தானாகவே கற்பனை செய்து நாடகம் தயாரிப்பான். பொம்மை நடிகர்கள் ஒவ்வொரு வரும் நடிப்பது போலக் கனவு காண்பான்.

இந்தப் பழக்கம் வளர்ந்துகொண்டே வந்தது. கொஞ்ச காலம் சென்றதும், கதைகள், நாடகங்கள் எழுத வேண்டும்

## 2 பெண் வேஷம்

ஒரு பணக்காரருக்குச் சில பெண் குழந்தைகள் இருந்தார்கள். அந்தக் குழந்தைகளை அவர் வெளியில் அனுப்பவே மாட்டார். வீட்டுக்குள்ளேயே அடைத்து வைப்பார். ஆண் குழந்தைகளுடன் அவர்கள் பேசக்கூடாது; சேர்ந்து விளையாடக் கூடாது என்பது அவரது கண்டிப்பான உத்தரவு.

அந்தப் பணக்காரர் வீட்டுக்குச் சமீபத்தில் ஒரு வீடு இருந்தது. அந்த வீட்டிலே ஒரு சிறு பையன் இருந்தான். அவனுக்கு அந்தப் பணக்காரருடைய போக்கு பிடிக்கவில்லை. ஒரு நாள் அந்தப் பணக்காரரிடத்திலே இதைக் கூறி விட்டான். உடனே அவருக்குக் கோபம் வந்துவிட்டது. 'நான் அப்படித்தான் செய்வேன். எங்கே எந்தப் பயலாவது என் பெண்கள் இருக்கும் இடத்திற்குப் போய்விடட்டும், பார்க்கலாம்" என்று வீறாப்புப் பேசினார்.

''ப்பூ, என்ன பிரமாதம்! நானே போய்க் காட்டு கிறேன்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னான் அந்தப் பையன். அவன் ஏதோ விளையாட்டாகச் சொல்கிறான் என்றே பணக்காரர் நினைத்தார். ஆனால், அவன் அதைக் காரியத்திலே காட்டிவிட்டான்.

ஒரு நாள் மாலை நேரம். அந்தப் பையன் ஒரு சிறுமி யைப் போல் அழகாக வேஷம் போட்டுக்கொண்டான். வேஷம் அவனுக்கு மிக மிகப் பொருத்தமாக இருந்தது. அப்போது யாராலுமே அவனை அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. அந்த வேஷத்துடன் அவன் பணக்காரர் வீட்டுக்குப் போனான். பணக்காரரின் முன்னே போய் நின்றான். ''ஐயா, நான் பக்கத்து ஊர்க்காரி. இந்த ஊர்ச் சந்தைக்கு வந்தேன். என் கூட வந்தவர்கள் என்னைத் தனியாக விட்டுப் போய்விட்டார்கள். இருட்டிப் போன தால் ஊருக்குப் போகப் பயமாயிருக்கிறது. இன்று இரவு

என்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று. அவன் பல கதைகள் எழுதினான்; நாடகங்கள் எழுதினான். அவை எல்லாம் மிகவும் நன்றாக இருந்தன. ஆனாலும், எழுத்துப் பிழைகள், இலக்கணப் பிழைகள் ஏராளமாக இருந்தன. 'பள்ளிக்கூடத்தில் சரியாகப் படிக்காமல் போனோமே!' என்று அப்போது அவன் வருந்தினான். ஆனாலும், முயற்சியை விடவில்லை. நாளடைவில் தவறு இல்லாமல் எழுதக் கற்றுக் கொண்டுவிட்டான்.

அவன் குழந்தைகளுக்காக எழுதிய கதைகள் பல. அந்தக் கதைகளைப் படித்துப் படித்துக் குழந்தைகள் ஆனந்தமடைய வேண்டும் என்பதுதான் அவனது ஆசை. அந்த ஆசை வீண் போகவில்லை. அவன் பிறந்த டென்மார்க் தேசத்துக் குழந்தைகள் மட்டுமல்ல; உலகத்திலுள்ள பல தேசத்துக் குழந்தைகளும் அவனுடைய கதைகளைப் படித்து ஆனந்தம் அடைகிறார்கள். நீங்களும் அவனுடைய கதைகளைப் படித்து ஆனந்தம் அடைய வேண்டாமா?

''அவனுடைய பெயரைச் சொன்னால்தானே அவன் எழுதிய கதைகளைப் படிக்க முடியும்?'' என்று கேட்கிறீர்களா?

இதோ அவனுடைய பெயரைச் சொல்லிவிட்டேன். **ஹான்ஸ் கிறிஸ்தியன் ஆண்டர்சன்** என்பதுதான் அவனுடைய பெயர்!



# 2 பெண் வேஷம்

ஒரு பணக்காரருக்குச் சில பெண் குழந்தைகள் இருந்தார்கள். அந்தக் குழந்தைகளை அவர் வெளியில் அனுப்பவே மாட்டார். வீட்டுக்குள்ளேயே அடைத்து வைப்பார். ஆண் குழந்தைகளுடன் அவர்கள் பேசக்கூடாது; சேர்ந்து விளையாடக் கூடாது என்பது அவரது கண்டிப்பான உத்தரவு!

அந்தப் பணக்காரர் வீட்டுக்குச் சமீபத்தில் ஒரு வீடு இருந்தது. அந்த வீட்டிலே ஒரு சிறு பையன் இருந்தான். அவனுக்கு அந்தப் பணக்காரருடைய போக்கு பிடிக்கவில்லை. ஒரு நாள் அந்தப் பணக்காரரிடத்திலே இதைக் கூறி விட்டான். உடனே அவருக்குக் கோபம் வந்துவிட்டது. ''நான் அப்படித்தான் செய்வேன். எங்கே எந்தப் பயலாவது என் பெண்கள் இருக்கும் இடத்திற்குப் போய்விடட்டும், பார்க்கலாம்'' என்று வீறாப்புப் பேசினார்.

''ப்பூ, என்ன பிரமாதம்! நானே போய்க் காட்டு கிறேன்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னான் அந்தப் பையன். அவன் ஏதோ விளையாட்டாகச் சொல்கிறான் என்றே பணக்காரர் நினைத்தார். ஆனால், அவன் அதைக் காரியத்திலே காட்டிவிட்டான்.

ஒரு நாள் மாலை நேரம். அந்தப் பையன் ஒரு சிறுமி யைப் போல் அழகாக வேஷம் போட்டுக்கொண்டான். வேஷம் அவனுக்கு மிக மிகப் பொருத்தமாக இருந்தது. அப்போது யாராலுமே அவனை அடையாளம் கண்டுபிடிக்க முடியாது. அந்த வேஷத்துடன் அவன் பணக்காரர் வீட்டுக்குப் போனான். பணக்காரரின் முன்னே போய் நின்றான். ''ஐயா, நான் பக்கத்து ஊர்க்காரி. இந்த ஊர்ச் சந்தைக்கு வந்தேன். என் கூட வந்தவர்கள் என்னைத் தனியாக விட்டுப் போய்விட்டார்கள். இருட்டிப் போன தால் ஊருக்குப் போகப் பயமாயிருக்கிறது. இன்று இரவு

மட்டும் இங்கே தங்குவதற்கு இடம் கொடுப்பீர்களா?" என்று தயவாய்க் கேட்டான்.

பணக்காரரின் மனம் உடனே இளகிவிட்டது. ''சரி வா" என்று பெண் வேஷத்திலிருந்த அந்தப் பையனை அந்தப்-புரத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கிருந்த பெண்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

பணக்காரருடைய பெண்களும் அவனை ஒரு பெண் என்றே நம்பிவிட்டார்கள். அவனிடம் அன்பாகப் பேசினார்கள். தின்பதற்குப் பலகாரங்கள் கொடுத்தார்கள். அவனுடன் சேர்ந்து விளையாடினார்கள். மூன்று மணி நேரம் இப்படி ஓடிவிட்டது.

அப்போது, ''தம்பி! தம்பி!'' என்ற குரல் தெருவிலிருந்து வந்தது. அந்தக் குரலைக் கேட்டதும், பெண் வேஷத்திலிருந்த அந்தப் பையன், ''அண்ணா, இதோ வந்து விட்டேன்!'' என்று கூறிக்கொண்டே எழுந்தான். தன்னைத் தேடிக்கொண்டு வந்த அண்ணன் வாசலில் நிற்பதைக் கண்டான். உடனே வாசலை நோக்கி ஓடினான். அப்போதுதான் எல்லாருக்கும் உண்மை தெரிந்தது. அவர்கள் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார்கள். அன்று முதல், அந்தப் பணக்காரர் பெண்களை வீட்டுக்குள் அடைத்து வைப்பதே இல்லை.

அன்று மாறுவேஷம் போட்டுப் பணக்காரரின் மனத்தை மாற்றிய அந்தப் பையனின் பெயர் உங்களுக்குத் தெரியுமா? 'கதாதரன்' என்பதுதான் அவனுடைய பெயர். அந்தப் பெயர்தான் பிற்காலத்தில் **ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸர்** ஆகிவிட்டது!

# 3 அதிசயத் தம்பி

"தம்பி, இன்று எனக்கு ஒரு மாதிரியாக இருக்கிறது. உடம்பு சரியில்லை. ஆகையால், நான் வழக்கமாகப் பெரிய புராணம் சொல்லும் இடத்திற்கு உடனே நீ போ. அங்கு வந்திருப்பவர்களிடம் எனக்கு உடல் நலமில்லை என்பதை அறிவித்துவிட்டு, பெரிய புராணத்திலிருந்து ஏதேனும் ஒன்றிரண்டு பாடல்களைப் படித்துவிட்டு வா" என்று கூறித் தம்பியை அனுப்பி வைத்தார் அண்ணா.

உடனே புராணம் சொல்லும் இடத்திற்குத் தம்பி சென்றான்; அங்கிருந்த கூட்டத்தாரிடம் அண்ணாவுக்கு உடல் நலமில்லை என்பதைத் தெரிவித்தான். பிறகு, இரண்டொரு பாடல்களை மிகவும் இனிமையாக, உருக்கமாகப் பாடினான். பாட்டைப் பதம் பிரித்து நன்றாகப் புரியும்படியாக அவன் பாடியது, அங்கிருந்தவர்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. உடனே அவர்கள், "தம்பி, நீ பாடுவது நன்றாயிருக்கிறது. இந்தப் பாடல்களுக்கு நீயே பொருள் சொன்னால் இன்னும் நன்றாயிருக்கும். சொல்வாயா?" என்று கேட்டார்கள்.

அவர்கள் விருப்பப்படியே ஒரு பாடலை எடுத்து முதலில் அவன் பொருள் சொல்ல ஆரம்பித்தான். பெரிய பெரிய அறிஞர்களால்கூட அவ்வளவு நன்றாக விளக்கிக் கூற முடியாது. அப்படி அருமையாகக் கூறினான் அந்தப் பையன்! அவன் சொல்லிக்கொண்டே யிருந்தான், சபையோர் கேட்டுக்கொண்டே யிருந்தார்கள், நேரம் போனதே தெரியவில்லை. இரவு பன்னிரண்டு மணிக்குத்தான் பேச்சு முடிந்தது! பேச்சு முடிந்ததும், "தம்பி, இனி பெரிய புராணம் முடியும் வரை நீங்களே வந்து சொல்லுங்கள். அண்ணாவிடம் நாங்கள் சொல்லி விடுகிறோம்" என்று கூட்டத்திலிருந்த பலர் கூறினார்கள். கூறியதோடல்ல; மறுநாளே அவனுடைய அண்ணாவைக் கண்டு நடந்ததை அறிவித்தார்கள். அத்துடன் தங்களுடைய விருப்பத்தையும் வெளியிட்டார்கள்.

இதைக் கேட்டதும் அண்ணுவுக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. ''என்ன, நம் தம்பியா அப்படிச் சொல்லு-கிறுன்! ஒருவேளை... நாம் சொல்லுவதைக் கேட்டுக் கேட்டு அப்படியே சொல்ல ஆரம்பித்துவிட்டான் போல் இருக்கிறது!'' என்று நினைத்தார். பிறகு ''சரி, உங்கள் விருப்பப்படியே நடக்கட்டும் இனி, அவனையே வரச் சொல்லுகிறேன்'' என்றுர்.

அப்புறம் வாரா வாரம் தம்பிதான் புராணம் சொல்லி வந்தான். அவன் திறமை சென்னை நகரம் முழுவதும் பரவியது. மூலை முடுக்கில் இருந்தெல்லாம் மக்கள் அங்கு வந்து அவனுடைய பேச்சைக் கேட்க ஆரம்பித்தார்கள். இதை அறிந்த அண்ணுவுக்கு முதலில் நம்பிக்கை ஏற்பட வில்லை. ஒரு நாள் அவர், கூட்டம் நடக்கும் இடத்திற்கு மெதுவாக வந்தார். மறைவாக ஓரிடத்தில் இருந்து கொண்டு தம்பியின் பேச்சை உற்றுக் கேட்டார். கேட்கக் கேட்க அவரது மகிழ்ச்சி பெருகியது. அப்படியே பரவசமாகி விட்டார். ''இப்படிப்பட்ட தம்பி கிடைத்ததே நாம் செய்த தவப் பயன்தான்!'' என்று நினைத்துப் பூரிப்பு அடைந்தார்.

இப்படிக் கூட்டத்தாரையும், கூடப் பிறந்த அண்ணனையும் வியப்படையச் செய்த அந்தத் தம்பி யார் தெரியுமா? அருட்பெருஞ் சோதி, தனிப்பெருங் கருணை **இராமலிங்க அடிகளாரே** தான்!



# 4 அழகான படம்

நான்காம் வகுப்பிலே கணக்குப்பாடம் நடந்து கொண்டிருந்தது. அச்சமயம், அந்த ஊரில் நடித்துக் கொண்டிருந்த நாடகக் குழுவின் தலைவர் அங்கு வந்து சேர்ந்தார். அவரைக் கண்டதும், ''பையன்களா, நானும் இவரும் ஓர் அவசர வேலையாக வெளியே செல்கிறோம். சிறிது நேரத்தில் திரும்பி விடுவோம். அதற்குள் இதைப் போட்டு வையுங்கள்'' என்று கூறி ஒரு கணக்கைக் கொடுத்துவிட்டு, நாடகத் தலைவருடன் கிளம்பி விட்டார் ஆசிரியர்.

எல்லா மாணவர்களும் கணக்கைப் போட்டுக்கொண்டு இருந்தார்கள். ஆனால், ஒரே ஒரு மாணவனுக்கு மட்டும் கணக்கிலே கவனம் செல்லவில்லை. பாதிக் கணக்குடன் நிறுத்திவிட்டுச் சட்டைப் பைக்குள் வைத்திருந்த ஒரு தாளை வெளியில் எடுத்தான். அது ஒரு நாடக விளம்பரத் தாள். அதில் அச்சிடப்பட்டிருந்த படத்தைப் பார்த்தான்.

அந்தப் படத்தில் ஒரு தாமரை இருந்தது. தாமரையின் நடுவிலே ஒரு யானை இருந்தது. யானையின் மேலே இந்திரன் இருந்தான். அந்தப் படத்தைப் பார்த்ததும், அதே போல் தன்னுடைய 'சிலேட்'டில் வரைய வேண்டுமென்ற ஆசை அவனுக்குத் தோன்றியது. உடனே வரைய ஆரம்பித்தான். வரைந்து முடிந்ததும் பார்த்தான்! அது அவ்வளவு நன்றாக இல்லை. இன்னும் நன்றாக வரைய வேண்டும் என்று எண்ணினான். உடனே 'சிலேட்'டின் மறு பக்கத்திலே அதே படத்தை வரைந்தான். படம் போடும் ஆர்வத்தில் அந்தப் பக்கத்தில் இருந்த அரை குறைக் கணக்கையும் அவன் அழித்துவிட்டான்!

சிறிது நேரம் சென்றது. ஆசிரியரும், நாடகத் தலைவரும் திரும்பி வந்தனர்! கணக்கைச் சரியாகப் போட்டிருக்கிறார்களா என்று ஒவ்வொரு மாணவனைப்

பார்த்துக் கொண்டே வந்தார் ஆசிரியர். படம் போட்டு வைத்திருந்தானே, அந்த மாணவனுடைய பலகையைக் கண்டதும், ஆசிரியருக்கு அளவு கடந்த கோபம் வந்து விட்டது! உடனே பிரம்பை எடுத்தார். "டேய், உன்னை நான் கணக்குப் போடச் சொன்னேனா, படம் போடச் சொன்னேனா?" என்று கேட்டுக் கொண்டே நன்றாக அடித்து விட்டார்.

அப்போது அருகிலே இருந்த நாடகத் தலைவர் அவன் வரைந்திருந்த படத்தைப் பார்த்தார். பார்த்ததும், "ஆஹா, எவ்வளவு அழகாகப் போட்டிருக்கிறான்! இவனைப் பாராட்டாமல் அடித்து விட்டீர்களே!" என்றார். உடனே ஆசிரியரும் அந்தப் படத்தைக் கூர்ந்து பார்த்தார் பார்த்ததும், அவருடைய கோபம் பறந்து விட்டது! உடனே, அந்த மாணவனை அன்பாக அணைத்துக் கொண்டு, "மிகவும் அழகாகப் போட்டிருக்கிறாய். ஆனாலும், கணக்குப் போட வேண்டிய நேரத்தில் படம் போடலாமா?" என்றார்.

சிறு வயதிலே சித்திரம் வரைவதில் தேர்ச்சி பெற்று இருந்த அந்த மாணவன், பெரியவனானதும் ஒரு நல்ல ஓவியனாக விளங்கினான். ஓவியனாக மட்டும் விளங்கவில்லை; சிறந்த கவிஞனாகவும் விளங்கினான்! 'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் ஒன்று வருகுது' என்ற பாட்டைப் பாடி, விடுதலைப் போருக்கு வேகம் கொடுத்த கவிஞர் நாமக்கல் **வெ. இராம லிங்கம் பிள்ளை**தான் அந்த மாணவன்!



# 5 பிழைத்துவிட்டான்!

வீட்டுக்காரரும் அவருடைய நண்பரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள்.

''உங்களுடைய பையனைக் காணோமே! எங்கே போய் இருக்கிறான்?'' என்று கேட்டார் நண்பர்.

''எங்கே போயிருப்பான்! ஏதேனும் ஒரு மூலையிலே முட்டை மேல் உட்கார்ந்து கொண்டிருப்பான்.''

''என்ன! முட்டைமேல் உட்கார்ந்து கொண்டிருப்பானா! ஏன், உட்கார வேறு இடம் கிடையாதா?''

''அவன் செய்வது எல்லாமே வேடிக்கையாகத்தான் இருக்கும். நேற்று நடந்ததைக் கேளுங்கள். அவனை வீட்டில் வெகு நேரமாய்க் காணோம். 'எங்கே போய் இருப்பான்!' என்று தேடிப் பார்த்தேன். கடைசியில், அவன் வீட்டின் பின்புறத்திலே ஒரு மூலையில், சில முட்டைகளைக் கீழே வைத்து அவற்றின் மேலே உட்கார்ந்து இருக்கக் கண்டேன். ''என்னடா இது, முட்டைமேல் உட்கார்ந்திருக்கிறாய்!'' என்று கேட்டேன். அதற்கு அவன் என்ன தெரியுமா பதில் சொன்னான்? 'நம் வீட்டுக் கோழி செய்கிறதே, அதே போல் நானும் முட்டையிலிருந்து குஞ்சை வெளியில் கொண்டு வரப் போகிறேன்' என்றான்!''

''அடேயப்பா! இந்த வயதிலே அவன் ஆராய்ச்சியில் இறங்கிவிட்டான் போலிருக்கிறது!''

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே வெளியில் சென்றிருந்த அந்தப் பையனும் அங்கு வந்து சேர்ந்தான். அவன் தலைமயிர் கலைந்திருந்தது. உடை முழுவதும் புழுதி படிந்திருந்தது. அவனைக் கண்டதும், 'என்னடா இது அலங்கோலம்?'' என்று கேட்டார் அவன் அப்பா.

உடனே அவன் பதில் சொல்ல ஆரம்பித்தான்: ''நான் வரும் வழியிலே ஒரு குதிர் இருந்தது. அதன் மேல் பகுதியில் வட்டமான ஒரு மூடி இருந்தது. அந்த மூடியைத் திறந்து கொண்டு அதன் வழியாகக் கோதுமையை உள்ளே கொட்டிக் கொண்டிருந்தார்கள், சில வேலையாட்கள். அவர்கள் கொட்டும் கோதுமை உள்ளே போய் எப்படி விழுகிறது என்று பார்க்க எனக்கு ஆசையாக இருந்தது. உடனே, குதிரின் மேல் 'விறு விறு' என்று ஏறினேன். உச்சியிலிருந்து ஓட்டை வழியாக உள்ளே எட்டிப் பார்த்தேன். அப்போது...... கால் இடறி, 'தொப்'பென்று உள்ளே விழுந்து விட்டேன்..''

''ஐயோ! அப்புறம்...?'' என்று பதற்றத்துடன் கேட்டார் அப்பா.

''நல்ல காலம், உடனே வேலையாட்கள் என்னைக் காப்பாற்றி விட்டார்கள். இல்லாத போனால், உள்ளேயே அமுங்கிச் செத்துப் போயிருப்பேன்!'' என்றான் அவன்.

அவனுக்கு மட்டுமல்ல; நம் எல்லாருக்குமே அது நல்ல காலம்தான்! 'ஏன்?' என்று கேட்கிறீர்களா? அவன் அன்று இறந்து போயிருந்தால், இன்று நாம் கிராமபோனில் பாட்டுக் கேட்க முடியாது; சினிமாக் கொட்டகையில் படம் பார்க்க முடியாது, வீட்டில் 'சுவிட்'சைப் போட்டு விளக்கை எரியவைக்க முடியாது. இந்த அற்புதங்களுக்கெல்லாம் முக்கிய காரணமாக இருந்தவனே அந்தச் சிறுவன்தான்! அவன் பெயர் **தாமஸ் ஆல்வா எடிசன்**.



# 6 சிறுமியின் சிரிப்பு

அரண்மனை வாயிலில் ஒரு சிப்பாய் நின்றுகொண்டு இருந்தான். அவன் நல்ல உயரமாக இருந்தான். கரடித் தோலால் செய்யப்பட்ட உடுப்பு அணிந்திருந்தான். தலையில் உயரமான கம்பளிக் குல்லாய் தரித்திருந்தான். கையிலே நீண்ட துப்பாக்கி வைத்திருந்தான். அவன் ஆடாமல் அசையாமல் விறைப்பாக நிற்பதைப் பார்த்தால், 'இது ஒரு சிலையாக இருக்குமோ!' என்ற சந்தேகம்கூடத் தோன்றும்!

அப்போது ஒரு சிறு பெண் அங்கே வந்தாள். அவள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவள். அவள் அரண்மனைக் குள்ளே வருவதைக் கண்டதும், அந்தச் சிப்பாய் கையில் இருந்த துப்பாக்கியைக் கீழே தாழ்த்தி மரியாதை செய்தான். அவள் உள்ளே சென்றதும் துப்பாக்கியை மேலே நிமிர்த்திப் பிடித்தான். அவளுக்கு இது வேடிக்கை யாக இருந்தது.

சிறிதுநேரம் சென்றது. திரும்பவும் அந்தச் சிறுமி வெளியே வந்தாள். அவள் வரும்போது சிப்பாய் முன் போலவே மரியாதை செலுத்தினான். திரும்பவும் அவள் உள்ளே சென்றாள். அப்போதும் அவன் மரியாதை செலுத்தினான். திரும்பத் திரும்ப அவள் உள்ளே போவதும், வெளியே வருவதுமாக இருந்தாள். சிப்பாயும் தன் கடமையைச் சளைக்காமல் செய்தான்.

கடைசியாக அவளுக்கே சிரிப்பு வந்துவிட்டது. அந்தச் சிப்பாயைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே, ''அடே, நான் வைத்திருக்கிறேனே சாவி கொடுத்தால் வேடிக்கை செய்யும் பொம்மை, அதைப் போலல்லவா இதுவும் செய்கிறது!'' என்று வியப்போடு கூறினாள்.

இதைக் கேட்டதும், அந்தச் சிப்பாய்க்குச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. ஆனாலும், வாய்க்குள்ளேயே சிரித்துக்கொண்டான்.

அந்தப் பெண்ணின் பதினோராவது வயதில்தான் அவளுடைய அப்பாவுக்கு முடிசூட்டு விழா நடந்தது. உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் அவருக்குப் பரிசுகள் வந்து குவிந்துகொண்டிருந்தன. அப்போது அந்தப் பெண்ணும் தன் கையால் அப்பாவுக்கு ஒரு பரிசளிக்க வேண்டுமென்று நினைத்தாள். உடனே கடைவீதிக்குச் சென்றாள். 'மிகவும் விலையுயர்ந்த—மிகவும் அபூர்வமான ஒரு சாமானை வாங்கி வந்தாள்' என்றுதானே நினைக்கிறீர்கள்? இல்லை; ஓரணா விலையில் ஒரு நோட்டுப் புத்தகத்தை வாங்கி வந்தாள். அதில் முடிசூட்டு விழாவைப் பற்றித் தனக்குத் தெரிந்ததை அழகாக எழுதினாள். மங்கலான சிவப்பு ரிப்பனால் அந்த நோட்டுப் புத்தகத்தில் உள்ள தாள்களைச் சேர்த்துக் கட்டினாள். அதன்மேலே, 'அப்பாவின் முடிசூட்டு விழா ஞாபகார்த்தமாக நான் அளித்தது; நானே தயாரித்தது' என்று எழுதிக் கொடுத்தாள்.

அவளுடைய பதினோராவது வயதில் அவளுடைய அப்பாவுக்கு முடிசூட்டுவிழா நடந்தது. ஆனால், அவளுடைய இருபத்தேழாவது வயதில், அவளுக்கே முடிசூட்டுவிழா நடக்கும் என்பது அப்போது அவளுக்குத் தெரிந்திருக்குமா? நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டாள்.

இன்று அவள் இங்கிலாந்தின் அரசியாக— **இரண்டாவது எலிசபெத் ராணி**யாக விளங்குகின்றாள்!



# 7 அறுந்த காற்றாடி

அந்த வழியாகச் சில சிறுவர்கள் ஓடிக்கொண்டிருந்-தார்கள். அவர்கள் ஓடும்போது தரையைப் பார்த்துக் கொண்டு ஓடவில்லை. மேலே நிமிர்ந்து பார்த்தபடியே ஓடிக் கொண்டிருந்தார்கள்.

அப்படி மேலே என்னதான் இருந்தது? ஒருவேளை அது புறாவாக இருக்குமோ? அதைத் துரத்திக் கொண்டுதான் அவர்கள் செல்லுகிறார்களோ? இல்லை. அது ஒரு காற்றாடி! அறுந்து போய்க் காற்றிலே பறந்து செல்லும் அந்தக் காற்றாடியைத் துரத்திக் கொண்டுதான் அவர்கள் சென்-றார்கள்.

அந்தக் காற்றாடி, 'வாருங்கள், வாருங்கள்' என்று ஆடி ஆடிக்கொண்டே அவர்களைச் சிறிது தூரம் அழைத்துச் சென்றது; பிறகு, ஒருவர் வீட்டுத் தோட்டத்திற்குள்ளே புகுந்தது; அங்கிருந்த ஒரு கொன்றை மரக் கிளையிலே போய் உட்கார்ந்து கொண்டது.

இதைக் கண்டனர் அந்தக் கூட்டத்தினர். உடனே அந்தத் தோட்டத்திற்குள் புகுந்தனர். சிலர் கொன்றை மரத்தில் ஏறிக் காற்றாடியை எடுக்க முயன்றனர். ஆனால் அவர்களைத் தாங்கும் சக்தி அந்த மரக்கிளைகளுக்கு இல்லை. அதனால், அவை முறிய ஆரம்பித்தன. சிறிதுநேரம் முயன்று பார்த்துவிட்டுத் தோல்வியுடன் அவர்கள் திரும்பிவிட்டனர்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டே இருந்தான் அந்த வீட்டுக்காரச் சிறுவன், அவனுக்கு அந்தக் காற்றாடியை எப்படியாவது எடுத்துவிட வேண்டுமென்று ஆசை. கூட்டத்தார் திரும்பிச் சென்றதும் அவன் மெதுவாக மரத்தை நெருங்கினான். தனியாக இருந்த ஒரு கிளையைப் பிடித்துக்கொண்டு மேலே ஏறினான். அவன் மிகவும் சிறுவனாக இருந்ததால் கிளை முறியவில்லை. அவன் மெல்ல மெல்ல ஒவ்வொரு கிளையாகப் பற்றி மேலே சென்றான்.

காற்றுடியின் அருகே சென்றுவிட்டான். இதோ இன்னும் ஒருவிநாடியில் காற்றுடி அவன் கைக்கு வந்துவிடும். ஆனால், எதிர்பாராத விதமாக அப்போது ஒரு குரல் வந்து காரியத்தைக் கெடுத்துவிட்டது. 'டேய்,டேய்' என்ற அந்தக் குரலைக் கேட்டதும், ''ஐயோ, அம்மா பார்த்துவிட்டாளே'' என்று அவன் நினைத்தான். உடனே, அவன் உடல் நடு நடுங்கியது; கையிலே பிடித்திருந்த மரக்கிளையை விட்டு விட்டான். மறு விநாடி அவன் கீழே விழுந்தான். விழும் போது முறிந்திருந்த கிளைகளில் ஒன்று அவனுடைய இடது விலாப் பக்கத்தில் பாய்ந்துவிட்டது! உடனே அங்கிருந்து இரத்தம் 'குபுகுபு' என்று வெளியே பீறிட்டுக்கொண்டு வந்தது. ஆனால் நல்ல காலம், அவன் உயிருக்கு ஒன்றும் ஆபத்து ஏற்படவில்லை. நாட்டு வைத்தியர் ஒருவர் பச்சிலைச் சாற்றால் அந்தக் காயத்தைப் பத்தே நாட்களில் குணப் படுத்தி விட்டார்.

காயம் குணமானாலும் அந்த வடுமட்டும் போகவில்லை. அப்போது ஏற்பட்ட வடு 1953-ம் ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 18ஆம் தேதிவரை அந்த உடலை விட்டு மறையவே இல்லை. அன்றுதான் அதுவும் அந்த உடலுடன் எரிந்து மறைந்துவிட்டது. அப்படியானால் அந்த உடல் யாருடையது?

'தமிழ்த் தென்றல்', 'தொழிலாளரின் தூயதலைவர்', 'எல்லார்க்கும் நல்லவர்' என்றெல்லாம் போற்றப்படும் **திரு. வி. கலியாணசுந்தர முதலியாருடையது**தான் அந்த உடல்!



# 8 அபராதம்

ஏழாவது வகுப்பிலே அந்தச் சிறுவன் படித்துக் கொண்டிருந்தான். அவன் பார்ப்பதற்கு மிகவும் வேடிக்கையாக இருப்பான். உடம்பு துரும்புபோல் இருக்கும், மூக்கு அகலமாயிருக்கும். ஆகையால், மற்ற மாணவர்கள் அவனை அடிக்கடி கேலி செய்வார்கள். இதனால், அவன் யாருடனும் சேரமாட்டான். கூடுமானவரை ஒதுங்கியே இருப்பான்.

அவன் படித்த பள்ளியில் தினசரி மாலை வேளையில் தேகப்பயிற்சி வகுப்பு நடக்கும். அந்த வகுப்பிற்கு ஒவ்வொரு பையனும் கட்டாயம் வரவேண்டும். இல்லாவிட்டால், தலைமை ஆசிரியர் சும்மா விடமாட்டார். அவர் மிகவும் கண்டிப்பானவர்!

சனிக்கிழமை காலையில் மட்டுந்தான் பள்ளிக் கூடம் உண்டு. பிற்பகலில் கிடையாது. ஆனால், அன்றுகூட மாலையில் தேகப்பயிற்சி வகுப்பு உண்டு. எல்லாரும் சரியாக நாலு மணிக்கு அங்கு வந்துவிடவேண்டும்.

அன்று சனிக்கிழமை. அந்தச் சிறுவனின் அப்பாவுக்கு உடம்பு சரியில்லை. காலையில் பள்ளிக்கூடம் விட்டு வந்ததும், அவன் அப்பாவுக்கு ஒத்தாசையாக வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அன்று மேகங்கள் சூரியனை மறைத்துக் கொண்டிருந்ததால் நேரம் தெரியவில்லை அவனிடம் அப்போது கடிகாரமும் இல்லை.

மணி நாலுக்கு மேல் ஆகிவிட்டது. ஆனாலும், அவன் 'இன்னும் நேரமாக வில்லை' என்று நினைத்துக்கொண்டே சாவதானமாகப் பள்ளிக்குப் புறப்பட்டான். பள்ளியை நெருங்கியதும் அவன் திடுக்கிட்டான். ஏன்? தேகப்பயிற்சி வகுப்பு முடிந்து எல்லாப் பிள்ளைகளும் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். பாவம், அந்தச் சிறுவன் ஏமாற்றத்துடன் வீடு வந்து சேர்ந்தான்.

மறுநாள், தலைமை ஆசிரியர் அந்தச் சிறுவனிடம், ''நேற்று ஏன் தேகப் பயிற்சி வகுப்பிற்கு வரவில்லை?'' என்று கேட்டார்.

அவன் நடந்ததை நடந்தபடி கூறினன். ஆனல், அவன் பேச்சை தலைமை ஆசிரியர் நம்பவில்லை. ஓர் அணுவோ, இரண்டணுவோ அபராதம் விதித்தார்.

'ஐயோ, அபராதம் கட்டவேண்டுமே!' என்று அந்தச் சிறுவன் கவலைப்படவில்லை; 'ஐயோ, தலைமை ஆசிரியர் நான் பொய் சொல்லுகிறேன் என்றல்லவா நினைத்து விட்டார்!' என்றுதான் எண்ணி வருந்தினன். உடனே. அவனுக்கு அழுகை வந்துவிட்டது.

'நான் கவனக் குறைவாக இருந்ததால்தானே இப்படியாகிவிட்டது.? ஒருவன் உண்மை பேசிவிட்டால் மட்டும் போதுமா? போதாது. கவனமாகவும் இருக்க வேண்டும்' என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

அன்று சிறு பையனுக இருந்தவன், பிற்காலத்தில் பெரிய மகாத்மா ஆகிவிட்டான்! அஹிம்சா மூர்த்தி, சத்திய சீலர், இந்தியர் தந்தை என்றெல்லாம் உலகம் போற்றும் **மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி**யின் இளமையில் நடந்ததுதான் மேலே கூறப்பட்ட நிகழ்ச்சி!



# 9 சுருட்டை மயிர்ப் பெண்

காலை நேரம். சூரிய ஒளி எங்கும் பரவியிருந்தது. அப்போது சுருட்டை மயிர்ப் பெண் ஒருத்தி சாலை வழியாக ஓடிக்கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில் அவளுடைய தோழிகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடன் சேர்ந்து விளையாடவே அவள் ஓடினாள்.

அப்போது, குறி சொல்லும் கிழவி ஒருத்தி எதிரே வந்தாள். அவள் அந்தப் பெண்ணிடம், "பாப்பா, எங்கே உன் கையைக் காட்டு; பார்க்கலாம்" என்றாள்.

உடனே அந்தப் பெண் நின்றாள். "என் கையைத்தானே பார்க்கவேண்டும்? இதோ என் கை" என்று கூறித் தன்னுடைய கையை விரித்துக் காட்டினாள்.

இதைச் சிறிது தூரத்தில் விளையாடிக் கொண்டிருந்த பெண்களில் ஒருத்தி பார்த்துவிட்டாள். உடனே அவள் மற்றவர்களிடம், "ஐயோ, நமது மர்ஜாவைப் பாருங்கள். அந்தக் குறிகாரியிடம் கையை நீட்டிக்கொண்டு நிற்கிறாள்!" என்றாள். உடனே எல்லாரும் அந்தச் சுருட்டை மயிர்ப் பெண் நிற்கும் பக்கம் பார்த்தார்கள். "அடியே மர்ஜா, அந்தக் கிழடு ஏதாவது உளறும். அதைக் கேட்டுக்கொண்டு நிற்காதே! ஓடிவா, சீக்கிரம்" என்று கத்தினார்கள்.

சுருட்டை மயிர்ப் பெண் அவர்களது பேச்சைக் கேட்கவில்லை. கையைக் காட்டிக்கொண்டே நின்றாள். கிழவி அவளது கை ரேகைகளைக் கூர்ந்து பார்த்து விட்டு, "எவ்வளவு அருமையான ரேகைகள்! நீ பெரியவளானதும் உனக்குப் பேரும் புகழும் பெருகி வரப் போகின்றன. நிச்சயமாகச் சொல்கிறேன்" என்றாள்.

இப்படி அவள் சொல்லிக் கொண்டிருக்கும்போதே எல்லாரும் அவள் அருகில் வந்துவிட்டார்கள். தோழிகள் வந்து சும்மா நிற்கவில்லை. சுருட்டை மயிர்ப் பெண்ணைக் கேலி செய்ய ஆரம்பித்தார்கள்

''ஏன்டியம்மா, உனக்குப் பேர் வரப்போகிறதாம்; புகழ் வரப் போகிறதாம். அப்படியானல், நீ பெரிய சீமாட்டியாகி விடுவாயோ?'' என்று கேலியாகக் கேட்டாள் ஒரு பெண்.

''இல்லேயடி இல்லே. இவள் பட்டத்து ராணியாகப் போகிருள். பார்த்துக்கொண்டே இரு'' என்று இன்னெருத்தி கிண்டலாகக் கூறினுள்.

இதேபோல் ஒவ்வொரு பெண்ணும் ஒவ்வொரு விதமாகக் கூறிக் கேலி செய்தாள். ஆனல் எவளுமே, 'இவள் பெரிய விஞ்ஞானியாகப் போகிருள்!' என்று சொல்லிக் கேலி செய்யவில்லை. அப்படி எவளாவது சொல்லியிருந்தால் அவள் வாய்க்குச் சர்க்கரை வாங்கிப் போட்டிருக்கலாம். ஏன் தெரியுமா?

அந்தச் சுருட்டை மயிர்ப் பெண் பெரியவளானதும் ஒரு பெரிய விஞ்ஞானியாகவே விளங்கினுள். ஆமாம், இப்போது புற்றுநோயைக் குணப்படுத்தவும், வாந்திபேதி, எலும் புருக்கிக் காய்ச்சல் முதலியவற்றிற்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும் உபயோகப் படுத்துகிருர்களே ரேடியம், அதைக் கண்டுபிடித்தவளே அந்தச் சுருட்டை மயிர்ப் பெண்தான்! அவளுக்கு ஒரு முறையல்ல; இருமுறை நோபல் பரிசு கிடைத்திருக்கிறது. வேறு எவருக்கும் அப்படிக் கிடைத்ததில்லை! ஆனலும், அவளுடைய தோழிகள் சொன்னது போல் 'மார்ஜா' என்று சொன்னல், அவளை உங்களுக்குத் தெரியாது. **மாடம் கியூரி** என்று சொன்னல் நன்ருகத் தெரியும். அப்படித்தானே!



# 10 முரட்டுப் பையன்

அவனுக்கு வயது ஏழு அல்லது எட்டுத்தான் இருக்கும். அந்த வயதிலே அவன் மகா முரடனாக இருந்தான். எல்லாருடனும் அடிக்கடி சண்டை போடுவான். சண்டையென்றால் வெறும் வாய்ச் சண்டையல்ல; கைச் சண்டை!

அவன் பணக்கார வீட்டுக் குழந்தையாக இருந்ததால், அவனிடம் ஏராளமான பொம்மைகள் இருந்தன. அந்தப் பொம்மைகளில் மனிதப் பொம்மைகளையெல்லாம் போர் வீரர்களைப் போல் அணிவகுத்து நிறுத்தி வைப்பான். பிறகு டமாரப் பொம்மையை எடுத்து, 'டம் டம், டம் டம்' என்று பல்லைக் கடித்துக்கொண்டு அடிப்பான். ஊது குழலால் பலங்கொண்ட மட்டும் ஊதுவான். இவையெல்லாம் எதற்கு? அவன் போருக்குக் கிளம்பிவிட்டான் என்பதை அறிவிப்பதற்காகத்தான்! யாருடன் அவன் போர் புரியப் போகிறான்? கூடப் பிறந்த தம்பிகளுடனும், அண்டை வீட்டுப் பிள்ளைகளுடனும்தான்!

இப்படிப்பட்ட முரட்டுப் பிள்ளையைப் பள்ளிக்கூடத்தில் படிக்கவைத்தால், அவன் அங்கே போய் ஒழுங்காகப் படிப்பானா? தினமும் மற்ற மாணவர்களுக்கு அவன் தொந்தரவு கொடுத்துக்கொண்டேயிருப்பான். ஆசிரியர்களையும் எதிர்த்துப் பேசுவான். இதனால் ஆசிரியர்கள் அவனுக்கு அடிக்கடி தண்டனை கொடுத்துவந்தார்கள். எதற்காக அவர்கள் தண்டனை கொடுக்கிறார்கள் என்பதை அவன் யோசித்துப் பார்ப்பதேயில்லை. வீணாக ஆத்திரப் படுவான். அவர்களைப் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று நினைப்பான்.

அந்த ஆசிரியர்களில் ஒருவர் அவனை அடிக்கடி கண்டித்து வந்தார். அவரை எப்படியாவது பழிக்குப் பழி வாங்கிவிட வேண்டுமென்று அவன் கங்கணம் கட்டிக்

கொண்டான்; தகுந்த சமயத்தையும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

இதற்கிடையில் மகனின் முரட்டுத்தனத்தை அறிந்தார் தந்தை. அவனை இராணுவப் பள்ளியில் சேர்த்து விடுவதே நல்லது என்ற முடிவுக்கு வந்தார். மகனிடம் இதைத் தெரிவித்தார். உடனே அவன், 'ஓ! நான் தயார். போர் வீரன் ஆகவே நான் விரும்புகிறேன்' என்றான். மறுநாளே தந்தை அவனை இராணுவப் பள்ளியில் சேர்த்துவிட்டார். அங்கு அவன் போர் முறைகளைக் கற்றான்; நன்கு தேர்ச்சி பெற்றான்.

கொஞ்ச காலம் சென்றது. அவனை அடிக்கடி கண்டித்து வந்தாரே, அந்த ஆசிரியரின் ஞாபகம் ஒரு நாள் அவனுக்கு வந்துவிட்டது. உடனே புறப்பட்டு நேராக அந்தப் பள்ளியை நோக்கிச் சென்றான். எதற்காக? அந்த ஆசிரியரிடம் மன்னிப்புக் கேட்கவா? இல்லை அவரைப் பழி வாங்கத்தான்! ஆனால், அந்த ஆசிரியர் அங்கே இல்லை. எங்கே போய்விட்டார்? அவனுக்கு அகப்படாத ஓர் இடத்திற்குப் போய்விட்டார். ஆம், இறந்துபோய் விட்டார்! இதைக் கேட்டதும் அவனுடைய ஆத்திரம் ஏமாற்றமாக மாறியது

அந்தக் காலத்தில் இப்படிப் போர் வெறி பிடித்து அலைந்த அவன், பிற்காலத்தில் ஒரு பெரிய போர்வீரன் ஆனான்; சிறந்த பேச்சாளன் ஆனான்; உலகம் அறிந்த ராஜ தந்திரியானான். ஒரு பெரிய சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரியும் ஆகிவிட்டான்!

பிரிட்டிஷ் பிரதமராகப் பல ஆண்டுகள் இருந்து வந்தாரே **வின்ஸ்டன் சர்ச்சில்,** அவர் செய்த திருவிளையாடல்களைப் பற்றித்தான் இவ்வளவு நேரமாக நீங்கள் படித்தீர்கள்.



# 11 அடைபட்ட சிறுமி

அந்தச் சிறுமி நல்ல கெட்டிக்காரி. எல்லாப் பாடங்களையும் நன்றாகத்தான் படித்தாள். ஆனாலும், ஆங்கிலப் பாடத்தில் மட்டும் அவள் கொஞ்சங்கூட அக்கறை செலுத்தவில்லை; அலட்சியமாகவே இருந்தாள்.

இப்படி அவள் இருப்பது அவளுடைய அப்பாவுக்குப் பிடிக்கவில்லை. எப்படியாவது அவளுக்கு ஆங்கிலத்திலே ஆர்வம் ஏற்படச் செய்ய வேண்டுமென்று எண்ணினார். தினமும் மகளுக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுத்துவந்தார். ஆனாலும் பலன் இல்லை!

எத்தனை நாட்களுக்குத்தான் அவர் இப்படிப் பொறுமையாகக் கற்றுக் கொடுத்துக் கொண்டேயிருப்பார். ஒரு நாள் அவருடைய பொறுமை பறந்து விட்டது? கோபம் அளவுக்கு மீறி வந்துவிட்டது. உடனே, அந்தச் சிறுமியைப் பிடித்து ஓர் அறைக்குள்ளே தள்ளிக் கதவை அடைத்து விட்டார். அன்று முழுவதும் அவள் உள்ளேயே இருந்தாள்.

ஆனால், அப்பா கொடுத்த தண்டனை வீண் போகவில்லை. சிறுமி அறையை விட்டு வெளியில் வந்ததுமே ஆங்கிலத்தில் அக்கறை செலுத்த ஆரம்பித்தாள். அன்று முதல் அப்பாவுடன் ஆங்கிலத்தில் பேசிப் பழகினாள். ஆங்கில ஆசை நாளுக்கு நாள் நன்கு வளர்ந்தது.

ஒரு நாள் கணிதத்தில் சில கேள்விகளுக்கு விடை எழுத வேண்டியிருந்தது. யோசித்து யோசித்துப் பார்த்தாள். கணக்குக்கு விடை தெரியவில்லை. அப்போது, திடீரென்று அவளுக்கு ஏதோ தோன்றியது. மனத்திலே தோன்றியதை அப்படியே அவள் எழுதி விட்டாள்.

அப்படி அவள் என்ன எழுதினாள்? கணக்குகளுக்கு விடையா? இல்லை, இல்லை. ஓர் அழகான ஆங்கிலப்

பாடலைத்தான் எழுதினாள். அந்த அழகான பாடலை இயற்றியவர் யார், தெரியுமா? வேறு யாரும் அல்ல, அந்தச் சிறுமியேதான்! ஆம், பதினோராவது வயதிலே அவள் பாட்டுக் கட்ட ஆரம்பித்தாள்! பதின்மூன்றாவது வயதில் ஆயிரத்து முந்நூறு வரிகளில் ஒரு நீண்ட கவிதையையும், இரண்டாயிரம் வரிகளில் ஒரு நாடகத்தையும் எழுதி எல்லாரையும் ஆச்சரியத்திலே ஆழ்த்தி விட்டாள்!

'அடேயப்பா! அந்த வயதிலே அப்படிப் பாட ஆரம்பித்தவள் பெரியவளானதும் எப்படி எப்படியெல்லாம் பாடியிருப்பாள்!' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

பெரியவளானதும் அவள் எழுதிய பாடல்கள் எத்தனை எத்தனையோ! அவை 'தேன்போல் இனிக்கின்றன' என்றார்கள் சிலர். 'தேசபக்தியை ஊட்டுகின்றன' என்றார்கள் வேறு சிலர். இன்னும் சிலர், 'ஏழை எளிய வர்களைப் பற்றி எவ்வளவு அற்புதமாகப் பாடியிருக்கிறாள்!' என்று பாராட்டினார்கள். கடைசியில் எல்லாரும் சேர்ந்து 'இந்தியாவின் கவியரசி' என்று புகழ ஆரம்பித்து விட்டார்கள்.

இந்தியாவின் கவியரசியாகவும், உலகம் போற்றும் கவிக் குயிலாகவும் விளங்கிய அந்த அம்மையார் **சரோஜினி தேவிதான்!**



## 12 ஓடிப் போனவன்

அந்தக் கிராமத்தில் ஒரு திண்ணைப் பள்ளிக்கூடம் இருந்தது. அங்கே தமிழ்மட்டுமே சொல்லிக்கொடுத்து வந்தார்கள். ஆங்கிலம் படிக்க வேண்டுமானால், அயலூருக்குத்தான் போகவேண்டும்.

அதே கிராமத்தில் ஒரு பணக்காரர் இருந்தார். அவருக்கு ஒரு மகன் இருந்தான். மகனுக்குத் திண்ணைப் பள்ளிக்கூடப் படிப்பு முடிந்துவிட்டது. இனி, ஆங்கிலம் கற்க வேண்டும். அவர் தம்முடைய மகனை ஆங்கிலம் கற்க அயலூருக்கு அனுப்பவில்லை. அந்த ஊரிலேயே மகனுக்காக ஒரு புதிய ஆங்கிலப் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார். அதில் மகனைப் படிக்க வைத்தார். அவனுடன் சேர்ந்து சிலரும் படித்தார்கள்.

'நம்முடைய மகன் நன்றாகப் படிக்கவேண்டும்; உயர் நிலை அடைய வேண்டும்' என்ற எண்ணத்தில்தான் அப்பா அப்படிச் செய்தார். ஆனால், மகனோ சரியாகப் படிப்பதில்லை. பள்ளிக்கூடத்துக்கே சரியாகப் போவதில்லை. 'ஊர் சுற்றி' யாக இருப்பான். அப்பா வேண்டியவரை சொல்லிப் பார்த்தார்; பயனில்லை!

ஒரு நாள் அப்பா கோபத்தில் அவனை நன்றாக அடித்து விட்டார்; எத்தனையோ முறைகள் அவன் அப்பாவிடம் அடி வாங்கியிருக்கிறான். ஆனாலும், அன்று விழுந்த அடிகளை அவனால் தாங்க முடியவில்லை; உடனே அவனுக்கு ஒருவித வெறுப்பு ஏற்பட்டது. 'இனி, இந்த வீட்டில் ஒருவினாடி கூட இருக்கப் போவதில்லை. இதோ கிளம்புகிறேன்' என்று கூறிக் கொண்டே வெளியேறினான். நேராக ஒரு நாவிதரிடம் சென்றான். தலையை மழுங்க மொட்டை அடித்துக் கொண்டான். உடுத்தியிருந்த உடைகளை உதறி எறிந்துவிட்டு, கட்டிய கோவணத்துடன் அந்தக் கிராமத்தை விட்டே புறப்பட்டு விட்டான்!

ஊர்ஊராகச் சுற்றினான். கால் வலிக்க அலைந்தான். சரியான சாப்பாடில்லை. நல்ல தூக்கமில்லை. பாவம், எத்தனை நாட்களுக்குத்தான் இப்படி இருக்க முடியும்? வயிறு காய்ந்தது. உடல் இளைத்தது. மனம் மாறியது. உடனே, வீடு திரும்ப வேண்டுமென்ற ஆசை தோன்றியது. ஆனாலும், நேராக வீடு செல்ல அவன் தயங்கினான். அப்பாவுக்குக் கடிதம் எழுதவும் மனம் வரவில்லை. யோசித்தான்.

பிறகு, தனது கிராமத்திலிருக்கும் நண்பன் ஒருவனுக்குத் தன்னுடைய கஷ்டங்களையெல்லாம் விளக்கி ஒரு கடிதம் எழுதினான். 'இந்தக் கடிதத்தை நண்பன் நம் அப்பாவிடம் காட்டுவான். உடனே அவர் கட்டாயம் இங்கு வருவார்; வந்து அழைத்துக் கொண்டு போவார்' என்பதுதான் அவனுடைய எண்ணம். அவன் எண்ணம் வீண் போகவில்லை. அது போலவே நடந்தது! நண்பன் மூலம் செய்தியை அறிந்ததும், மகனைக் காணாமல் ஏங்கி இருந்த அப்பா ஆவலாக ஓடோடி வந்தார்; மகனைக் கண்டார்; கட்டித்தழுவிக் கண்ணீர் சொரிந்தார். அன்றே இருவரும் ஊர் திரும்பினர்.

நல்லவேளை! அந்த மகன் அப்படியே துறவியாய்ப் போயிருந்தால், அவன் பிற்காலத்தில் எப்படி ஆகி இருப்பானோ? ஒரு வேளை சாது சிதம்பரமாகியிருக்கலாம். அல்லது, யோகி சிதம்பரமாகியிருக்கலாம். ஆனால், தென்னாட்டுத் திலகராகவோ, கப்பலோட்டிய தமிழனாகவோ, தேச பக்தர் **வ. உ. சிதம்பரம்பிள்ளை**யாகவோ விளங்கியிருக்க முடியுமா?



# 13 வகுப்பிலே கிளர்ச்சி

அப்போது கல்கத்தா பிரஸிடென்ஸி கல்லூரியில் சரித்திரப் பேராசிரியராக ஒரு வெள்ளைக்காரர் இருந்தார். அவர் பெயர் சி. எப். ஓட்டன் என்பது. அவர் எப்போதும் இந்தியர்களைப் பற்றி இழிவாகவே பேசுவார்.

ஒரு நாள் பாடம் நடத்திக் கொண்டிருக்கும் போது அவர் வங்காளிகளைப் பற்றி மிகவும் கேவலமாகப் பேசி விட்டார். ''சார், இந்த மாதிரி பேசுவது அழகல்ல. எங்கள் மனத்தைப் புண்படுத்தாதீர்கள்'' என்று அவரிடம் மாணவர்கள் சொல்லிப் பார்த்தார்கள். ஆனால், அவர் மாணவர்களின் பேச்சை மதிக்கவில்லை. திரும்பத் திரும்ப வங்காளிகளைக் கேவலப்படுத்தியே பேசிக் கொண்டிருந்தார் அவரது பேச்சைக் கேட்கக் கேட்க மாணவர்களின் உள்ளம் கொதித்தது. ஆத்திரம் கொண்டார்கள். கட்டுப்பாடாக எல்லாரும் வகுப்பைவிட்டு வெளியேறிவிட்டார்கள்.

மாணவர்களின் கிளர்ச்சியைக் கண்டு ஓட்டன் திடுக்கிட்டார். கல்லூரி அதிகாரிகள் திகைத்தார்கள். கடைசியில், இந்தக் கிளர்ச்சியை ஆரம்பித்தவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் யார் யார் என்று கண்டு பிடித்தார்கள். அவர்களுக்கு உடனே அபராதம் விதிக்க வில்லை; அல்லது சில நாட்களுக்கு அவர்கள் கல்லூரியில் கால் எடுத்து வைக்கக் கூடாது என்றும் உத்தரவு போட வில்லை. வேறு என்ன செய்தார்கள்? அவர்களை அந்தக் கல்லூரியை விட்டே நீக்கிவிட்டார்கள்! அத்துடன், இரண்டு ஆண்டுகளுக்கு வேறு எந்தக் கல்லூரியிலுமே அவர்கள் சேர முடியாதபடியும் செய்து விட்டார்கள்!

அப்படி நீக்கப்பட்ட மாணவர்களில் நமக்கு மிகவும் வேண்டிய ஓர் இளைஞனும் இருந்தான். 'கல்லூரியை விட்டு நம்மை நீக்கிவிட்டார்களே!' என்று அவன் கவலைப்பட வில்லை. ''மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் திரும்பவும் கல்லூரியில் சேர்த்துக் கொள்வார்கள்'' என்று சிலர்

அவனிடம் கூறினார்கள். ஆனால், அவன் அதற்கும் தயாராக இல்லை. ''ஒரு வெள்ளைக்காரர் நம் நாட்டவரைப் பற்றிக் கேவலமாக நம்மிடமே பேசுகிறார். அதைக் கேட்டுக் கொண்டு மரக்கட்டை மாதிரி நாம் சும்மா இருப்பதா? அவரது போக்கைக் கண்டிக்கவே நாங்கள் கிளர்ச்சி செய்தோம். நாங்கள் செய்ததில் தவறே இல்லை'' என்றான் அந்த இளைஞன்.

அத்துடன் அவன் படிப்புக்கு முழுக்குப் போட்டு விட்டுச் சும்மா இருக்கவில்லை. இரண்டு ஆண்டுகள் சென்ற பிறகு, திரும்பவும் கல்லூரியில் சேர்ந்தான்; அக்கறையுடன் படித்தான்; பி. ஏ. வகுப்பில் தேறினான்; பிறகு இங்கிலாந்து சென்றான்; ஐ. ஸி. எஸ். படித்தான். அதிலும் தேறி விட்டான். ஐ. ஸி. எஸ். பட்டம் பெற்ற போது அவனுக்கு வயது இருபத்து மூன்றுதான்!

'ஐ. ஸி. எஸ். படித்தவர்' என்றாலே, 'ஆண்டவனுக்கு அடுத்தவர்' என்று நினைக்கும் காலம் அது! ஆனால், அந்த இளைஞன் பணத்தைப் பற்றியோ, பதவியைப் பற்றியோ கவலைப்படவில்லை. பம்பாய் வந்து இறங்கியதும் உடனே விடுதலைப் போரில் குதித்து விட்டான்! பல முறை சிறை சென்றான்; பல முறை நாடு கடத்தப்பட்டான்; வாழ்நாள் முழுவதையும் தேசத்துக்காகவே அர்ப்பணம் செய்தான்.

அந்த இளைஞன்தான் 'ஜெய் ஹிந்த்' என்னும் மந்திரத்தைத் திக்கெல்லாம் முழங்கச் செய்த **நேதாஜி சுபாஷ் சந்திர போஸ்!**



# 14 மூன்று பூச்சிகள்

''பள்ளிக்கூடத்துக்குச் செல்ல வேண்டும்; பாடங்களை ஒழுங்காகப் படிக்கவேண்டும்; பரீட்சைகளில் தேற வேண்டும்; பட்டங்கள் பெறவேண்டும்' என்ற எண்ண மெல்லாம் அந்தப் பையனுக்கு இல்லை. அப்பா அம்மா கட்டாயப் படுத்துகிறார்களே என்றுதான் அவன் பள்ளிக் கூடம் போய்வந்தான். ஆசிரியர்கள் சொல்வதை அவன் காதில் வாங்கிக் கொள்வதே இல்லை. எப்போதும் ஏதாவது யோசனை செய்து கொண்டே இருப்பான். இதனால், ஆசிரியர்கள் எல்லாரும் அவனை 'மக்கு' என்றார்கள். மாணவர்கள் எல்லாரும் 'பைத்தியம்' என்றார்கள்.

பள்ளிக்கூடம் விட்டதும் அவன் நேராக வீட்டுக்கு வர மாட்டான். காடு மேடுகளில் சுற்றிக்கொண்டே திரிவான். வண்டு, வண்ணாத்திப் பூச்சி, விட்டில், வெட்டுக்கிளி இப்படிப்பட்ட பூச்சிகளைப் பிடிப்பதில் அவனுக்கு அள வில்லாத ஆனந்தம். அந்தப் பூச்சிகளைப் பிடித்து வீட்டுக்குக் கொண்டு வருவான். அவை எப்படி இருக்கின்றன, என்ன என்ன செய்கின்றன, எது எதைத் தின்கின்றன என்றெல்லாம் கவனிப்பான்.

அவனிடத்திலே ஒரு புத்தகம் இருந்தது. அதில் எல்லா விதமான பூச்சிகளின் படங்களும் அச்சிடப்பட்டிருந்தன. அந்தப் பூச்சிகளில் பெரும்பாலான பூச்சிகளை அவன் பிடித்து விட்டான். ஒரு பூச்சியைப் பிடித்தவுடன், அந்தப் பூச்சியின் படம் எங்கே இருக்கிறது என்று தேடிப் பார்ப்பான். அந்தப் படத்தின் அடியில், 'என்னால் பிடிக்கப்பட்டது' என்று எழுதி, பிடித்த தேதியையும் குறித்து வைப்பான். இப்படி அந்தப் புத்தகத்தில் அநேகமாக எல்லாப் படங் களின் அடியிலும் எழுதி வைத்திருந்தான்.

ஒருநாள், அவன் ஒரு பழைய மரத்தின் பட்டையை உரித்தான். உள்ளே அபூர்வமான இரண்டு பூச்சிகள்

இருந்தன. உடனே, மெதுவாக வலது கையால் ஒரு பூச்சி யையும், இடது கையால் மற்ெருரு பூச்சியையும் பிடித்துக் கொண்டான். அப்போது இன்னும் ஓர் அழகான பூச்சி உள்ளே இருப்பது தெரிந்தது. அதையும் பிடித்துவிட வேண்டும் என்பது அவனுடைய ஆசை. உடனே, வலது கையிலிருந்த பூச்சியை உதடுகளுக்கிடையே வைத்துக் கொண்டு, அந்தப் புதிய பூச்சியைப் பிடிக்கப் போனுன். அப்போது அவன் வாயில் வைத்திருந்த பூச்சி, தன் கொடுக்கிலிருந்து ஒரு விதமான திரவத்தை அவன் நாக்கில் கக்கி விட்டது! அந்தத் திரவம் பட்டதும் நாக்கு எரிய ஆரம்பித்தது. உடனே 'தூ, தூ' என்று வாயிலிருந்த பூச்சியை அவன் துப்பி விட்டான். அது 'விர்' ரென்று பறந்தோடி விட்டது.

இப்படிச் சிறுவயதிலே பூச்சிகளைப் பற்றி ஆராய்ச்சி செய்துவந்த சிறுவன்தான் ஒரு காலத்தில் உலகம் போற்றும் பெரிய விஞ்ஞானி ஆகிவிட்டான். பூச்சி புழுக்களைப் பற்றியும், தாவரங்களைப் பற்றியும், மனிதர்களைப் பற்றியும் அவன் பல புது உண்மைகளைக் கண்டுபிடித்தான். 'மந்தியிலிருந்து மனிதன் வந்தான்' என்ற உண்மையை உலகுக்கு எடுத்துச் சொன்னவனே அவன்தான்! அவன் பெயர் **சார்லஸ் ராபர்ட் டார்வின்.**



# 15 பறக்கும் பல்லக்கு

வீட்டு வராந்தாவிலே ஒரு பல்லக்கு இருந்தது. அது மிகவும் பெரிய பல்லக்கு. முன் பக்கம் எட்டுப்பேர், பின்பக்கம் எட்டுப்பேர் சேர்ந்து அதைத் தூக்குவார்கள். தூக்குகிற வர்கள் சிவப்பு பனியன் போட்டுக் கொண்டிருப்பார்கள். கையிலே காப்பு, காதிலே கடுக்கன் முதலிய அலங்காரத்துடன் பல்லக்கைத் தூக்கிச் செல்வார்கள். ஆனால், இதெல்லாம் ஒரு காலத்தில்தான். இப்போது யாரும் அதைத் தூக்குவ தில்லை. அதனால்தான் அது வராந்தாவில் தூங்கிக் கொண்டு இருந்தது. 'பாட்டி காலத்துப் பல்லக்கு' என்று எல்லாரும் அதைச் சொல்லி வந்தார்கள்.

பல்லக்கின் மேலிருந்த மெருகெல்லாம் போய்விட்டது. வர்ணங்களும் மங்கிப் போயிருந்தன. உள்ளேயிருந்த மெத்தையும் கொஞ்சம் கொஞ்சமாகக் கிழிந்து கொண்டிருந்தது. மெத்தைக்குள்ளிருந்த தேங்காய் நார்களும் வெளியிலே தலைகாட்ட ஆரம்பித்தன!

பாவம், அந்தப் பல்லக்குக்கு இப்போது மதிப்பே இல்லை. ஒருவர்கூட அதைக் கவனிப்பதில்லை. 'ஒருவர்கூட' என்றா சொன்னேன்? தப்பு, தப்பு! ஒரே ஒரு பையன்மட்டும் அதை அடிக்கடி கவனித்து வந்தான். கவனித்து வந்ததோடல்ல; ஓடிப்போய் அதற்குள் அடிக்கடி உட்கார்ந்தும் பொழுது போக்கி வந்தான். அதற்குள் எப்படிப் பொழுது போகும்?

பல்லக்கில் ஏறி உட்கார்ந்ததும், அவனுக்குத் தான் படித்த கதைகளெல்லாம் ஞாபகத்துக்கு வந்துவிடும். உடனே அந்தப் பல்லக்குத் திடீரென்று வானத்திலே பறந்து செல்லும்! மறு நிமிஷம், ஓர் அழகான தீவிலே இறங்கிவிடும்! பிறகு அங்கிருந்து புறப்பட்டு ஒரு பெரிய மலை மேலே ஏறி நிற்கும்! அங்கும் அதிக நேரம் நிற்காது. சிறிது நேரத்தில் அதை விட்டுப் புறப்பட்டு நேராக ஒரு காட்டுக்குள்ளே

போய் இறங்கிவிடும்! ஆம், இப்படியெல்லாம் பல்லக்கில் உட்கார்ந்தபடியே அவன் கற்பனை செய்து பார்ப்பான்! நேரம் போவதே தெரியாது. மணிக்கணக்காகப் பல்லக்கில் உட்கார்ந்தபடி அவன் கற்பனை செய்து கொண்டே யிருப்பான்.

அவனுடைய கற்பனை நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வந்தது. கற்பனை வளர வளர அவனுக்குக் கவிதை எழுதும் திறமையும் ஏற்பட்டது. பதிஞேராவது வயதிலே அவன் அற்புதமாகக் கவிதைகள் எழுத ஆரம்பித்துவிட்டான்! பிறகு அவன் எத்தனையோ கவிதைகள் எழுதினுன். அந்தக் கவிதைகளெல்லாம் உலகம் முழுவதும் பரவின. அவன் எழுதிய 'கீதாஞ்சலி' என்ற கவிதைப் புத்தகத்துக்கு நோபல் பரிசும் கிடைத்தது.

'அப்படியாளுல் அந்தப் பையனின் பெயர் எங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டுமே!' என்றுதானே கேட்கிறீர்கள்? உங்களுக்குத் தெரியாமலா இருக்கும்?

**இரவீந்திரநாத தாகூர்** என்ருல், யாருக்குத்தான் தெரியாது!



## 16 வேர்க்கடலை

மணி அடித்தது. உபாத்தியாயர் வகுப்பிற்குள் நுழைந்தார். வகுப்பிலே காலை வைத்ததும், 'சர சர' என்ற சத்தம் கேட்டது. கீழே பார்த்தார். தரை முழுவதும் வேர்க்கடலைத் தோல்கள் கிடந்தன. உடனே அவருக்கு அபாரமாகக் கோபம் வந்துவிட்டது!

''ஏ பையன்களா, வகுப்புக்குள் வேர்க்கடலை தின்றவர்கள் யார், யார்? உண்மையைச் சொல்லிவிடுங்கள்" என்றார்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை. ''சொல்லமாட்டீர்களா? சரி, முதலில் நீங்கள் எல்லாரும் சேர்ந்து இந்தத் தோல்களைப் பொறுக்கி வெளியிலே கொண்டுபோய்ப் போட்டுவிட்டு வாருங்கள்" என்று உத்தரவு போட்டார் உபாத்தியாயர்.

உடனே எல்லாப் பையன்களும் வேக வேகமாக வேர்க்கடலைத் தோல்களைப் பொறுக்க ஆரம்பித்தார்கள் ஆனால், ஒரே ஒரு பையன்மட்டும் அசையாமல் நின்ற இடத்திலே நின்றான். அவனைப் பார்த்ததும் உபாத்தியாயரின் கோபம் அதிகமாகிவிட்டது. 'விறு விறு' என்று அவன் அருகே சென்றார். அவனை அடிப்பதற்காகப் பிரம்பை ஓங்கினார். அவரது கோபத்தைக் கண்டோ அல்லது அவரது கையிலிருந்த பிரம்பைக் கண்டோ அந்தப் பையன் நடுங்கிவிடவில்லை. தைரியமாகவே நின்று கொண்டிருந்தான்!

''டேய், ஏன் சும்மா நிற்கிறாய்? நீயும் தோல்களை எடுக்கிறாயா, அல்லது...உம்'' என்று பயமுறுத்தினார் உபாத்தியாயர்

''நான் வேர்க்கடலையை இங்கே சாப்பிடவில்லை. அதனால்தான் தோல்களை எடுக்கவுமில்லை!'' என்று தைரியமாகக் கூறினான் அந்தப் பையன்.

''என்ன! எடுக்க முடியுமா, முடியாதா?" என்று அந்தப் பள்ளிக்கூடமே கிடுகிடுக்கும்படி உரத்த குரலில் கேட்டார் உபாத்தியாயர்.

''ஐயா! தோல்களைப் போட்டவர் யார் யார் என்று எனக்குத் தெரியாது. ஆனால், உண்மையாகச் சொல்கிறேன். நான் போடவே இல்லை. குற்றம் செய்யாதபோது எதற்காக எனக்குத் தண்டனை? தோல்களை நான் எடுத்தால் நானும் வேர்க்கடலை தின்றதாகத்தானே அர்த்தம்? அதனால்தான் எடுக்கவில்லை. எடுக்க முடியாது'' என்று அழுத்தமாகக் கூறினான் அவன்!

இதைக் கேட்டதும் உபாத்தியாயர் அப்படியே அசந்து போய்விட்டார்! அவரது கையிலிருந்த பிரம்பும் மெதுவாகக் கீழே இறங்கியது. அவன் கூறியது உண்மைதான் என்பதை அறிந்துகொள்ள அவருக்கு அதிக நேரம் ஆகவில்லை. பேசாமல் திரும்பிப்போய் இடத்திலே உட்கார்ந்து விட்டார்.

உபாத்தியாயரிடம் அவ்வளவு தூரம் துணிவுடன் பேசி உண்மையை உணரச் செய்த அந்த மாணவன் யார் தெரியுமா? 'சுதந்திரம் எங்கள் பிறப்புரிமை; அதை அடைந்தே தீருவோம்' என்று வீரகர்ஜனை புரிந்த **லோகமான்ய பாலகங்காதர திலகரே**தான்!



## 17 வகுப்பிலே கடைசி

1642-ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினம். அந்த தினத்தில் இங்கிலாந்திலுள்ள ஒரு கிராமத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. ''கிறிஸ்துமஸ் தினத்தன்று இந்தக் குழந்தை பிறந்திருக்கிறது. அதனால், மிகுந்த கீர்த்தியுடன் விளங்கப்போகிறது!'' என்று அப்போது சிலர் பேசிக் கொண்டார்கள். அதனைக் கேட்டுப் பிள்ளையின் அம்மா பெருமகிழ்ச்சி அடைந்தாள்.

வயது வந்ததும், அந்தப் பிள்ளையைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தார்கள். ஆனால், அவன் பள்ளிக்குச் சரியாகப் போகமாட்டான்; பாடத்தை ஒழுங்காகப் படிக்க மாட்டான். இதனால், 'வகுப்பிலே கடைசி' என்று அவனுக்கு மற்ற மாணவர்கள் பட்டப் பெயர் சூட்டி விட்டார்கள். படிப்புத்தான் இல்லை. பலமாவது இருக்கக் கூடாதா? அதுவும் இல்லை. துரும்புபோல் இருந்தது அவனது உடம்பு.

ஒரு நாள், அந்தச் சிறுவனை அவனது வகுப்பிலே படித்த ஒரு முரட்டுப் பையன் வம்புக்கு இழுத்தான். சிறுவன் முதலில் பேசாமல்தான் இருந்தான். ஆனால், அந்த முரடன் சும்மா இருக்கவில்லை. கைநீட்ட ஆரம்பித்து விட்டான். உடனே, ''டேய், பேசாமல் போகிறாயா? அல்லது திருப்பித் தரட்டுமா?'' என்று சிறுவன் கோபமாகக் கேட்டான்.

''அடேயப்பா! ஆளைப் பார்த்தாலே தெரிகிறதே! நான் ஒரு தட்டு தட்டினால், நீ ஒன்பது குட்டிக்கரணம் போடு வாய். ஜாக்கிரதை!'' என்றான் முரடன்.

''எங்கே, தட்டு பார்க்கலாம்'' என்றான் சிறுவன். உடனே முரடன் கையால் தட்டவில்லை; காலால் அச் சிறுவனின் வயிற்றிலே உதைத்து விட்டான்! வயிற்றில் உதை விழுந்ததும், சிறுவனுடைய கோபம் அதிகமாகி விட்டது. ஒரே பாய்ச்சலாக அந்த முரடன்மேல் பாய்ந் தான். அவனைப் பிடித்து 'மடேர்' என்று எதிரிலிருந்த

சுவரில் தள்ளினுன்; அவனுடைய மூக்கைச் சுவருடன் வைத்து, ‘தேய் தே’யென்று தேய்த்தான்! பாவம், அந்த முரடன் பயந்து ஓடிவிட்டான்.

முரடனைக் கைச்சண்டையில் தோற்கடித்ததோடு அந்தச் சிறுவன் நிற்கவில்லை. படிப்பிலும் தோற்கடிக்க வேண்டுமென நினைத்தான். முயற்சியுடன் படித்தான். வகுப்பிலே முதல்வனுக மறு பரீட்சையிலே தேறிவிட்டான். அப்புறம், ‘வகுப்பிலே கடைசி’ என்று யாராவது அவனைக் கூப்பிடுவார்களா? இல்லை, அப்படிக் கூப்பிடத்தான் தைரியம் வருமா!

அந்தச் சிறுவனின் பெயர் என்ன என்றுதானே கேட்கிறீர்கள்? அவன் பெயரைத் தெரிந்துகொள்ள வேண்டுமாஞல், உடனே நீங்கள் இங்கிலாந்துக்குப் புறப்பட்டுச் செல்லவேண்டும். இங்கிலாந்தில் ‘லிங்கன் ஷயர்’ என்று ஒரு பிரதேசம் இருக்கிறது. அந்தப் பிரதேசத்தில் ‘கிராந்தம்’ என்ற ஓர் ஊர் இருக்கிறது. அந்த ஊரில் உள்ள ‘கிங்ஸ் ஸ்கூல்’ என்ற பள்ளிக்கூடத்து ஜன்னல்களைப் பார்த்துக்கொண்டே வந்தால், ஒரு ஜன்னல் சட்டத்திலே அவன் பெயரைக் காணலாம். அங்கே படிக்கும்போது அவனே தன் கைப்பட ‘ஐ. நியூட்டன்’ என்று அங்கே எழுதி வைத்திருக்கிறுன். ஆம், ‘புவிஈர்ப்புச் சக்தி’ என்று படித்திருப்பீர்களே, அந்த சக்தியைக் கண்டுபிடித்தவன் அதே **ஐசக் நியூட்டன்**தான்!



# 18 யுத்த விளையாட்டு

அது ஓர் இராணுவப் பள்ளிக் கூடம். அந்தப் பள்ளிக் கூடத்தில் பல மாணவர்கள் பயிற்சி பெற்று வந்தார்கள். பயிற்சி பெறும் நேரம் தவிர மற்ற நேரங்களில் ஓடி ஆடி விளையாட வேண்டுமென்பது அவர்களது ஆசை. ஆனால், பள்ளிக்கூடத்தைச் சுற்றி எங்கு பார்த்தாலும் ஒரே பனியாயிருக்கும். பாறை பாறையாய்ப் பனிக்கட்டிகள் உறைந்திருக்கும். ஆகையால், அவர்கள் 'விளையாட முடியவில்லையே!' என்று ஏங்குவார்கள்.

அவர்களது ஏக்கத்தை அறிந்தான் புதிதாக அங்கு வந்து சேர்ந்த ஒரு மாணவன். உடனே, 'இதற்கு என்ன செய்யலாம்?' என்று யோசித்தான். சிறிது நேர யோசனைக்குப் பின் ஒரு முடிவுக்கு வந்தான். அந்த முடிவுப்படி மற்ற மாணவர்களை அழைத்துக்கொண்டு பனிப்பாறைகள் நிறைந்திருக்கும் ஓர் இடத்திற்குச் சென்றான். அவர்களுடன் சேர்ந்து பனிக்கட்டிகளால் அங்கேயே ஓர் அரண் ஏற்படுத்தினான். பிறகு என்ன செய்தான்?

நண்பர்களில் பாதிப் பேரை அரணுக்கு அந்தப் பக்கத்திலும் பாதிப்பேரை இந்தப் பக்கத்திலும் நிற்க வைத்தான். பிறகு, இந்தப் பக்கத்தில் நிற்போரைப் பார்த்து, "தோழர்களே, நீங்கள்தான் எதிரிகள் என்று நினைத்துக் கொள்ளுங்கள். இப்போது நீங்கள் என்ன செய்ய வேண்டும், தெரியுமா? இந்த அரணைத் தாக்க வேண்டும்" என்றான்.

அதே சமயம், அந்தப் பக்கத்தில் நிற்பவர்களைப் பார்த்து, "நீங்கள் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? எதிரிகள் அரணைத் தாக்காதபடி தடுத்துக் காக்க வேண்டும். அதுமட்டுமா? அவர்களைப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்யவும் வேண்டும் சரிதானா - ம் - நடக்கட்டும் யுத்தம்" என்று முழங்கினான்.

அவ்வளவுதான். இரு சாராரும் யுத்தத்தில் இறங்கி விட்டார்கள். வெகு மும்முரமாக யுத்தம் நடந்தது.

அந்தப் போலி யுத்தத்தைப் பார்க்க சுற்றுப் புறத்திலுள்ள மக்களெல்லாரும் வந்து கூடிவிட்டார்கள். அவர்கள், யுத்தம் செய்யும் முறையைத் திறமையாகக் கற்றுக்கொடுத்த அந்த மாணவனைப் பாராட்டினார்கள்.

''இவன் இவ்வளவு சிறியவனாக இருக்கிறான்! இந்த வயதிலே போர் நடத்தும் முறையை மிகவும் நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறானே!'' என்று கூறி வியந்தார்கள்.

அதே மாணவன் ஒரு காலத்தில் மிகமிகப் பெரிய வீரனாக விளங்குவான் என்றோ, ஐரோப்பாக் கண்டத்தையே ஆட்டி வைப்பான் என்றோ அப்போது யாரும் நினைத்திருக்க மாட்டார்கள். ஆம், **நெப்போலியன்** என்ற பெயரைக் கேட்டாலே பெரிய அரசர்கள்கூட நடுநடுங்குவார்களே!



## 19 அஞ்சா நெஞ்சன்

அவனோடு கூடப்பிறந்தவர்கள் பதினோரு பேர். அவன் ஆறாவது பிள்ளை. அவனுடைய தந்தை ஒரு மத குருவாக இருந்தார். அவருடைய வருமானம் மிகக் குறைவு. அதனால் குழந்தைகளை நன்றாக வளர்க்க அவரால் முடியவில்லை. எல்லாரும் எலும்பும் தோலுமாகவே இருந்தார்கள். அந்த ஆறாவது பிள்ளையும் அப்படித்தான் இருந்தான். உடம்பு உறுதியாக இல்லாத போனாலும், அவனுடைய உள்ளம் உறுதியாகவே இருந்தது. 'பயம்' என்றால் என்ன என்றே அவனுக்குத் தெரியாது! எந்தக் காரியத்தையும் துணிவோடு செய்வான்.

ஒரு நாள் அவனும் அவனுடைய அண்ணனும் பள்ளிக் கூடத்துக்குப் புறப்பட்டார்கள். பள்ளிக்கூடம் அருகிலே இல்லை. வெகு தூரத்தில் இருந்தது. அதற்குப் போகும் பாதையும் மிக மோசமாக இருந்தது. அந்தக் காலத்தில்—அதாவது பதினெட்டாம் நூற்றாண்டில் நல்ல பாதையைக் காண்பதே அபூர்வம். அதிலும், அது மிகவும் கடுமையான பனிக்காலம். வழி நெடுக பனி பெய்து கொண்டிருந்தது.

வீட்டை விட்டுக் கிளம்பும்போதே அவர்களுடைய அப்பா, ''பனி மிகவும் அதிகமாகப் பெய்கிறது. ஆகையால் வழியில் ஆபத்து ஏற்படும்போல் தோன்றினால், உடனே திரும்பி வந்துவிடுங்கள். ஆபத்தில் சிக்கிக்கொள்ளாதீர்கள்!'' என்று எச்சரித்து அனுப்பினார்.

அண்ணனும் தம்பியும் பனியை நோக்கிப் பனிப் பாதையில் நடந்து சென்றார்கள். வழியிலே ஓரிடத்தில் பாதை மிகவும் குறுகலாக இருந்தது. அத்துடன் சதுப்பு நிலமாகவும் இருந்தது. ''இங்கே காலை வைத்தால் நிச்சயம் உள்ளே அழுந்தி விடுவோம்!'' என்று நினைத்து எவருமே பயப்படுவார்கள். அந்த அண்ணனும் அப்படி நினைத்துத் தான் பயந்தான். அங்கேயே நின்று விட்டான். ஆனால் தம்பியோ சிறிதும் அஞ்சவில்லை. மேலே செல்லக் காலை எடுத்து வைத்தான்.

அப்போது அண்ணன் ''தம்பி, வழியிலே ஆபத்து ஏற்படும் போல் தோன்றினால், உடனே திரும்பி வந்துவிடுங்கள் என்று

அப்பா சொன்னாரல்லவா? வா, திரும்பி விடுவோம். இதில் காலை வைத்தால் ஆபத்துத்தான்!'' என்றான்.

''அண்ணா, ஆபத்து ஏற்படும்போல் தோன்றினால்தானே அப்பா திரும்பிவரச் சொன்னார்? எனக்கு அப்படித் தோன்ற வில்லை. நீ வேண்டுமானால் திரும்பிப் போ'' என்று கூறி விட்டுத் தைரியமாகத் தம்பி முன்னேக்கிச் சென்றான். ஆபத்துக்களையெல்லாம் சாமர்த்தியமாகக் கடந்து பள்ளிக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிட்டான்.

அவனுடைய அஞ்சா நெஞ்சத்தைக் கண்டு அவனுடைய அண்ணன் ஆச்சரியப்பட்டான். அப்பாவும் ஆச்சரியப் பட்டார். ஒரு காலத்தில், இந்த உலகமே ஆச்சரியப் பட்டது! அது எப்போது?

மாபெரும் வீரன் நெப்போலியனையே அவன் தோற் கடித்த சமயத்தில்தான்!

**நெல்சன்** என்ற பெயரைச் சொன்னாலே நெஞ்சை நிமிர்த்தி நிற்பார்கள் ஆங்கிலேயர்கள். இங்கிலாந்தில் எத்தனையோ வீரர்கள் பிறந்திருக்கிறார்கள். ஆனாலும், 'வீரருக்கெல்லாம் வீரர்' என்று போற்றப்படுபவர் இந்த நெல்சன் ஒருவர்தான்!



## 20 பிறந்த நாள்

அந்தப் பையனுடைய அப்பா ஒரு பெரிய வக்கீல். நல்ல பணக்காரர். மிகுந்த செல்வாக்கு உடையவர். அவரும் அவருடைய மனைவியும் பிள்ளையை மிகவும் செல்வமாக வளர்த்து வந்தார்கள்.

தீபாவளி, கோகுலாஷ்டமி, தசரா—இப்படிப்பட்ட பண்டிகைகள் வந்துவிட்டால், அந்தப் பையனுக்குத் தலை கால் தெரியாது. ஆடிப் பாடி மகிழ்வான். ஆனாலும் அவற்றை யெல்லாம்விட மிகவும் பிரியமான நாள் ஒன்று அவனுக்கு உண்டு. அதுதான் அவனுடைய பிறந்த நாள்!

பிறந்த நாளன்று அவன் சரிகை வேட்டி கட்டிக் கொள்வான். பட்டுச் சொக்காய் போட்டுக்கொள்வான். அன்று அவனுடைய வீட்டுக்குப் பெரிய பெரிய மனிதர்கள் எல்லாரும் வருவார்கள். அவர்கள் வரும்போது வெறும் கையுடனா வருவார்கள்? நல்ல நல்ல பரிசுகளெல்லாம் கொண்டு வருவார்கள். அவற்றை அவனிடம் கொடுத்து அவனுடைய ஆனந்தத்தை அதிகப்படுத்துவார்கள். அவன், 'இந்த விழாவில் நான்தான் கதாநாயகன்' என்று எண்ணி எண்ணிப் பெருமைப்படுவான்.

அடடே, முக்கியமாக நடக்கும் ஒன்றைக் கூற மறந்து விட்டேனே! அன்று அதிகாலையில் ஒரு பெரிய தராசில், ஒரு தட்டில் அந்தப் பையனை உட்கார வைப்பார்கள்; மற்றொரு தட்டில் கோதுமை முதலிய தானியங்களை வைப்பார்கள். தானியங்களின் எடை அவனுடைய் எடைக்குச் சரியாக வரும்வரை வைத்துக் கொண்டே யிருப்பார்கள். பிறகு, தராசில் வைத்த தானியங்களை எடுத்து ஏழை, எளியவர் களுக்குக் கொடுப்பார்கள்.

அன்று முழுவதும் ஒரே கோலாகலமாக இருக்கும். பெரிய விருந்தும் நடக்கும். இப்படியெல்லாம் குதூகலமாக

இருக்கும்போது திடீரென்று அந்தப் பையனுக்கு ஒரு வருத்தம் வந்துவிடும். அது என்ன வருத்தம்?

'இந்தப் பிறந்த நாள் ஆண்டுக்கு ஒரு முறைதானே வருகிறது? அடிக்கடி வரவில்லையே!' என்று எண்ணி வருந்துவானாம்.

அந்தப் பையன் நினைத்ததுபோலவே அவனுடைய பிறந்த நாள் அடிக்கடி வருவதாயிருந்தால், 'குழந்தைகள் தின'மும் நம் நாட்டில் அடிக்கடி கொண்டாடப்படும் அல்லவா?

'குழந்தைகள் தினத்திற்கும் அந்தப் பையன் பிறந்த நாளுக்கும் என்ன சம்பந்தம்?' என்றுதானே கேட்கிறீர்கள்? கேளுங்கள்; நன்றாய்க் கேளுங்கள்.

நவம்பர் பதினான்காம் தேதியை நாடெங்கும் குழந்தைகள் தினமாகக் கொண்டாடி வருகிறார்கள் அல்லவா? இதற்குக் காரணம் என்ன? 'என் பிறந்த நாளைக் குழந்தைகள் தினமாகக் கொண்டாடுங்கள். அப்படிக் கொண்டாட வேண்டுமென்பதுதான் என் ஆசை' என்று உலகம் போற்றும் ஒருவர் கூறினாரே, அவர் யார் என்று தெரிகிறதா? அவரைத் தெரிந்து கொண்டால், ''பிறந்த நாள் அடிக்கடி வராதா!'' என்று கவலைப்பட்ட அந்தச் சிறுவனும் யார் என்பது தெரிந்துவிடும். என்ன, தெரிந்து கொண்டு விட்டீர்களா?

உலகம் போற்றும் தலைவர், மனிதருள் மாணிக்கமாக விளங்கியவர், நம் அருமை மாமா **ஜவாஹர்லால் நேரு**தான் அந்தச் சிறுவன்!



## 21 நோயாளிப் பொம்மை

இப்போது ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்குப் படுக்கை வசதி இருக்கிறது; நல்ல காற்றோட்டம் இருக்கிறது. நோயாளிகளைக் கவனிக்க நர்ஸுகள் இருக்கிறார்கள்; அங்கேயே உணவு கொடுக்கிறார்கள். இன்னும் பல வசதிகள் செய்து கொடுக்கிறார்கள்.

ஆனால், நூறு ஆண்டுகளுக்கு முன்னால், இந்த மாதிரி வசதிகளையெல்லாம் ஆஸ்பத்திரிகளில் காண முடியாது. இருட்டு அறைகளில் நோயாளிகளைப் போட்டுவைப்பார்கள். சரியாகக் கவனிக்க மாட்டார்கள். ஆஸ்பத்திரிக்குப் போனாலே சுடுகாட்டுக்குப்போனது போலத்தான்!

அந்தக் காலத்து நர்ஸுகளுக்குப் படிப்பு வாசனை கிடையாது. அவர்களில் அநேகர் மிகவும் கேவலமாக நடந்து கொள்வார்கள். நோயாளிகளிடம் உள்ள பொருள்களைத் திருடிக் கொள்வார்கள். நோயாளிகளைக் கொடுமைப் படுத்துவார்கள். மது அருந்துவார்கள். இப்படிப்பட்ட காலத்தில் யாராவது நர்ஸுகளுக்கு மதிப்புக் கொடுப்பார்-களா? நர்ஸுகளைக் கண்டாலே சிலர் நையாண்டி செய்வார்கள்; சிலர் தலையில் அடித்துக் கொள்வார்கள்.

நர்ஸுகள் என்றாலே மிகவும் மோசமானவர்கள் என்று நினைக்கும் அந்தக் காலத்தில், ஒரு சிறுமி நர்ஸாக வேண்டுமென்று நினைத்தாள். நினைத்ததோடல்ல; நர்ஸ் போலவே நடித்தும் வந்தாள். அவள் சாதாரணச் சிறுமியல்ல; பணக்காரச் சிறுமி! கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த சிறுமி!

அவள் விளையாட்டுப் பொம்மைகளை வைத்து விளையாடுவதே வேடிக்கையாக இருக்கும். மாப்பிள்ளை பெண் விளையாட்டோ, சாமி விளையாட்டோ விளையாட மாட்டாள். அந்தப் பொம்மைகளை நோயாளிகளாக

# 21 நோயாளிப் பொம்மை

இப்போது ஆஸ்பத்திரியில் நோயாளிகளுக்குப் படுக்கை வசதி இருக்கிறது; நல்ல காற்றோட்டம் இருக்கிறது. நோயாளிகளைக் கவனிக்க நர்ஸுகள் இருக்கிறார்கள்; அங்கேயே உணவு கொடுக்கிறார்கள். இன்னும் பல வசதிகள் செய்து கொடுக்கிறார்கள்.

ஆனால், நூறு ஆண்டுகளுக்கு முன்னால், இந்த மாதிரி வசதிகளையெல்லாம் ஆஸ்பத்திரிகளில் காண முடியாது. இருட்டு அறைகளில் நோயாளிகளைப் போட்டுவைப்பார்கள். சரியாகக் கவனிக்க மாட்டார்கள். ஆஸ்பத்திரிக்குப் போனாலே சுடுகாட்டுக்குப்போனது போலத்தான்!

அந்தக் காலத்து நர்ஸுகளுக்குப் படிப்பு வாசனை கிடையாது. அவர்களில் அநேகர் மிகவும் கேவலமாக நடந்து கொள்வார்கள். நோயாளிகளிடம் உள்ள பொருள்களைத் திருடிக் கொள்வார்கள். நோயாளிகளைக் கொடுமைப் படுத்துவார்கள். மது அருந்துவார்கள். இப்படிப்பட்ட காலத்தில் யாராவது நர்ஸுகளுக்கு மதிப்புக் கொடுப்பார்-களா? நர்ஸுகளைக் கண்டாலே சிலர் நையாண்டி செய்வார்கள்; சிலர் தலையில் அடித்துக் கொள்வார்கள்.

நர்ஸுகள் என்றாலே மிகவும் மோசமானவர்கள் என்று நினைக்கும் அந்தக் காலத்தில், ஒரு சிறுமி நர்ஸாக வேண்டுமென்று நினைத்தாள். நினைத்ததோடல்ல; நர்ஸ் போலவே நடித்தும் வந்தாள். அவள் சாதாரணச் சிறுமியல்ல; பணக்காரச் சிறுமி! கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த சிறுமி!

அவள் விளையாட்டுப் பொம்மைகளை வைத்து விளையாடுவதே வேடிக்கையாக இருக்கும். மாப்பிள்ளை பெண் விளையாட்டோ, சாமி விளையாட்டோ விளையாட மாட்டாள். அந்தப் பொம்மைகள் நோயாளிகளாக

# 22 இது சத்தியம்

அந்தப் பள்ளிக்கூடத்திலே அடிக்கடி விழாக்கள் நடைபெறும். ஒவ்வொரு விழாவிலும் மாணவர்கள் ஏதேனும் ஒரு நாடகம் நடத்துவார்கள். அந்த நாடகங்கள் ஒவ்வொன்றிலும் ஒரு சிறு பையன் தவருமல் நடித்து வருவான். ஒரு நாடகத்தில் அவன் இளவரசர் வேஷத்திலே வருவான். இன்னொரு நாடகத்தில் ஆங்கிலச் சிப்பாய் வேஷத்திலே வருவான். மற்ருெரு நாடகத்திலே அவன் ஜமீன்தாராக வருவான். எந்த வேஷம் போட்டாலும், அவனுக்கு அழகாயிருக்கும்; மிகவும் பொருத்தமாயிருக்கும்.

ஒருவனுக்கு அழகும் வேஷப் பொருத்தமும் இருந்து விட்டால் போதுமா? படிப்பு வேண்டாமா? ஒழுக்கம் வேண்டாமா? கட்டாயம் வேண்டும். அந்தச் சிறுவனிடத்திலே அவையெல்லாம் இருந்தன. வகுப்பிலே அவன் தான் முதல்வஞக இருந்தான். நல்ல ஒழுக்கம் உள்ளவஞகவும் இருந்தான்.

அவன் மாலைப் பொழுதில் மற்ற மாணவர்களுடன் சேர்ந்து விளையாடுவது வழக்கம். அந்த மாணவர்கள் சிலர் அடிக்கடி கெட்ட வார்த்தைகள் பேசுவார்கள். இது அந்தச் சிறுவனுக்குப் பிடிக்காது. ''ஏன் இந்த மாதிரியெல்லாம் பேசுகிறீர்கள்? இதஞல், உங்களுக்கு என்ன லாபம்?'' என்று அவர்களைச் சிறிது கோபத்தோடு கேட்பான்.

ஒருநாள் விளையாடும்போது அந்தச் சிறுவனே ஒரு கெட்ட வார்த்தையைக் கூறிவிட்டான். வேண்டுமென்று அவன் கூறவில்லை. தவறுதலாக அந்த வார்த்தை அவனது வாயிலிருந்து வெளிவந்து விட்டது. விளையாட்டு மும்முரத்தில் யாரும் அவன் பேசியதைக் கவனிக்கவில்லை. ஆஞலும், அவன் தன் தவறை நினைத்து வருந்தாமலில்லை. விளையாட்டு முடிந்து வீட்டுக்குச் சென்று கொண்டிருந்த போது, திடீரென்று ஓரிடத்தில் அவன் நின்ருன். 'கெட்ட

வார்த்தை பேசக்கூடாது என்று நான் மற்றவர்களுக்குக் கூறி வருகிறேன். ஆனால், நானே இன்று கெட்டவார்த்தை பேசிவிட்டேனே! இது பெரும் தவறல்லவா? இனி, இந்த மாதிரி ஒரு நாளும் பேசமாட்டேன். இது சத்தியம்!'' என்று கூறினான். யாரிடம்? தனக்குத்தானே கூறிக் கொண்டான்! அதன்பிறகு அவன் கெட்ட வார்த்தை பேசியதே இல்லை!

சிறுவயதிலேயே ஒழுக்கத்திற்கு அவ்வளவுதூரம் மதிப்புக் கொடுத்ததால்தான், பிற்காலத்தில் அவன் மிகப் பெரிய அறிஞராக விளங்கினன். ஒரு சிறந்த தேச பக்தனாகத் திகழ்ந்தான்; அந்தச் சிறுவனின் பெயர்தான் **தாதாபாய் நௌரோஜி.**

நௌரோஜி வகுப்பில் மட்டும்தானா முதல்வரா யிருந்தார்? பொதுவாழ்விலும் முதல்வராகவே விளங்கினர். லண்டன் காமன்ஸ் சபையில் அங்கத்தினராயிருந்த முதல் இந்தியர் நௌரோஜிதான்! பம்பாய் எல்பின்ஸ்டன் கல்லூரியில் பேராசிரியராயிருந்த முதல் இந்தியர் நௌரோஜிதான்! பம்பாய் நகரில் பெண்கள் பள்ளிக்கூடம் ஒன்றை முதல் முதலில் ஏற்படுத்தியவரும் நௌரோஜி தான். இவை மட்டுந்தானா? காங்கிரஸ் மகாசபையை ஏற்ப டுத்திய முதல் தலைவர்களுள் நௌரோஜியும் ஒருவராக இருந்தார். 'சுயராஜ்யம்' என்ற வார்த்தையை முதலில் உபயோகப் படுத்தியவரே நௌரோஜிதான்!



## 23 வாக்குப் பலித்தது!

அப்போதிருந்த எட்டயபுரம் அரசருக்குத் தமிழிலே ஆர்வம் அதிகம். தமிழ்ப் புலவர்களை நன்றாக ஆதரித்து வந்தார். அந்தப் புலவர்களில் சின்னச்சாமி ஐயர் மிகவும் முக்கியமானவர்.

சின்னச்சாமி ஐயருக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் சுப்பையா. சுப்பையா தினமும் புத்தகத்தையும் கற்பலகையையும் தூக்கிக்கொண்டு பள்ளிக்குப் புறப்படுவான். ஆனால், நேராகப் பள்ளி செல்ல மாட்டான்!

வழியிலே யார் வீட்டுத் திண்ணையிலாவது அவற்றை வைத்துவிட்டுக் குளத்தங்கரையை நோக்கிச் செல்வான். அங்குள்ள மரங்களையும், பறவைகளையும் பார்த்துப் பார்த்துப் பரவசமடைவான். திரும்பி வீட்டுக்கு வரும்போது புத்தகத்தையும் கற்பலகையையும் மறந்தே போய் விடுவான் இப்படி அவன் எத்தனையோ தடவைகள் வெறும் கையுடன் வீடு சென்றிருக்கிறான்.

சுப்பையா வெறுங்கையோடு திரும்புவதைக் கண்டால், அவனுடைய சிற்றன்னை உடனே வீட்டை விட்டுப் புறப்பட்டுவிடுவாள்! தெருவிலே இருக்கும் திண்ணைகளிலெல்லாம் புத்தகத்தையும் கற்பலகையையும் தேடுவாள். கிடைத்தால் எடுத்து வருவாள். இல்லாவிட்டால், புதிதாக வாங்கி வந்து சுப்பையாவிடம் கொடுப்பாள். இதெல்லாம் சின்னச்சாமி ஐயருக்குத் தெரியாது. ஆகையால், அவர் சுப்பையா ஒழுங்காகப் பள்ளிக்குப் போய் வருவதாகவே நினைத்துக் கொண்டிருந்தார்.

சுப்பையாவுக்குப் பள்ளிப் படிப்பு பாகற்காயாக இருந்தாலும், பாட்டு எழுதக்கூடிய திறமை நிறைய இருந்தது. அந்த வயதிலேயே அவன் பாட்டுக்கள் எழுதுவான். தான் எழுதிய பாடல்களை எட்டயபுரம் அரசரிடம் கொண்டு

போய்க் காட்டுவான்; அழகாகப் பாடி விளக்கியுட் கூறுவான். சுப்பையாவின் திறமையைக் கண்டு அரசா வியப்படைவார்; பாராட்டிப் பேசுவார். ஆனாலும், மகன் பாட்டெழுதும் செய்தி அப்பாவுக்குத் தெரியவே தெரியாது

ஒருநாள் எட்டயபுரம் அரசர் சின்னச்சாமி ஐயரிடம், ''உங்கள் மகன் அற்புதமாகப் பாட்டு எழுதுகிறான். திரு ஞானசம்பந்தரைப் போலவே அவனுடைய புகழும் எங்கும் பரவப் போகிறது. எட்டயபுரத்தின் பெருமையும் ஓங்கப் போகிறது'' என்று சொன்னார்.

அரசர் சொன்னதை அவர் முதலில் நம்பவில்லை. ஆனால், நேரிலே பார்த்த பிறகும் நம்பாமல் இருக்கமுடியுமா? தம்முடைய மகன் மிகவும் அழகாக. இயற்கையாகப் பாடல் எழுதுவது கண்டு அவர் பூரித்துப் போய்விட்டார்!

சுப்பையாவின் புகழும், எட்டயபுரத்தின் பெருமையும் எங்கும் பரவப்போவதாக எட்டயபுரம் அரசர் அன்று சொன்னாரே, அது பிற்காலத்தில் நூற்றுக்கு நூறு பலித்து விட்டது! ஆம், அன்று வெறும் சுப்பையாவாக இருந்த அவன், இப்போது மகாகவி **சுப்பிரமணிய பாரதியார்** என்று எல்லாராலும் போற்றப்படவில்லையா!



# 24 வாழைப் பழம்

பெரியம்மா ஒரு சீப்பு வாழைப் பழத்தை வாங்கிக் கொண்டு வீட்டுக்குள் வந்தாள். வாழைப்பழச் சீப்பைக் கண்டதும், பிள்ளைகள் எல்லாரும் பெரியம்மாவைச் சூழ்ந்து கொண்டார்கள். பெரியம்மா சீப்பிலிருந்த வாழைப் பழங்களைப் பிய்த்து ஆளுக்கு ஒன்றாகக் கொடுத்தாள்.

அந்தப் பிள்ளைகளில் மூத்த பிள்ளையிடத்தில் பெரியம்மாவுக்குப் பிரியம் அதிகம். அதனால், அவனுக்கு அதிகமாகப் பழங்கள் கொடுக்க நினைத்தாள். ஆனால், மற்றவர்களை வைத்துக்கொண்டு எப்படிக் கொடுப்பது? அவர்களும் அதிகமாகக் கேட்பார்களே!

பெரியம்மா அறைக்குள்ளே மீதம் இருந்த பழங்களைக் கொண்டுபோய் வைத்தாள். வைத்துவிட்டு வந்து, பெரிய பையனிடம், ''அறைக்குள்ளே இருக்கும் பழங்களெல்லாம் உனக்குத்தான். அப்புறமாக யாருக்கும் தெரியாமல் எடுத்துத் தின்றுவிடு'' என்று சைகை மூலம் அறிவித்தாள். ஆனால் பாவம், அந்தப் பையனுக்கு அவளது சைகையின் அர்த்தம் தெரியவில்லை. அவனுக்குத்தான் தெரியவில்லையே தவிர, அங்கே நின்ற சின்னப் பையன் சுப்புரத்தினத்திற்கு நன்றாகத் தெரிந்துவிட்டது!

உடனே அவன், யாரும் பார்க்காதபடி மெதுவாக அறைக்குள்ளே புகுந்தான். அங்கே இருந்த அத்தனை பழங்களையும் தின்று தீர்த்தான். கடைசியில் பழங்கள் இருந்த இடத்தில் தோல்களை வைத்துவிட்டு மெதுவாக வெளியில் வந்துவிட்டான்.

சிறிது நேரம் சென்றது. பெரியம்மா மூத்த பிள்ளையை அழைத்து, ''தம்பி, அறைக்குள்ளே இருக்கிற பழங்களை

எடுத்துக் கொள்ளச் சொன்னேனே, இன்னும் எடுத்துக் கொள்ளவில்லையா?'' என்று கேட்டாள்.

''இல்லையே!'' என்றான் அவன். ''சரி, உடனே போய் எடுத்துக்கொள். சுப்புரத்தினத்திற்குத் தெரிந்தால் விட மாட்டான்'' என்றாள் பெரியம்மா.

உடனே அவன் ஆவலாக அறைக்குள் ஓடினான். வாழைப் பழங்கள் இருந்த இடத்தை நெருங்கினான். தோல்களைக் கண்டதும் திடுக்கிட்டான். உடனே பெரியம்மாவிடம் திரும்பிவந்து கலக்கத்துடன் விஷயத்தைக் கூறினான். பெரியம்மா உடனே சுப்புரத்தினத்தைக் கூப்பிட்டுக் கேட்டாள். ''ஆம், நான்தான் தின்றேன்'' என்று அவன் துடுக்காகப் பதில் சொன்னான். பெரியம்மா கோபம் கொண்டாள். வாயில் வந்தபடி திட்டினாள்.

இந்தச் செய்தி சுப்புரத்தினத்தின் அப்பாவுக்கும் எட்டியது. உடனே சுப்புரத்தினம் நடந்ததை நடந்தபடி ஒரு காகிதத்தில் எழுதி அப்பாவிடம் கொடுத்தான். எப்படி எழுதிக் கொடுத்தான்? வசனத்திலா? இல்லை; பாட்டிலேயே எழுதிக் கொடுத்தான்! அப்பா, அந்த அழகான பாட்டைப் படித்ததும், மிகவும் வியப்படைந்தார். அவனைப் பாராட்டினார். சிறு வயதிலே பாட்டு எழுதிய சுப்புரத்தினம், பிற்காலத்தில் தமிழ்நாடு போற்றும் ஒரு தலைசிறந்த கவிஞராகத் திகழ்ந்தார்.

''என்ன, சுப்புரத்தினமா! அப்படியும் ஒரு கவிஞர் இருந்தாரா?'' என்ற சந்தேகம் உங்களில் சிலருக்குத் தோன்றுகிறதல்லவா? ஆம், தோன்றத்தான் செய்யும். ஏனென்றால், அந்த சுப்புரத்தினம், **பாரதிதாசன்** என்ற புனை பெயரில் அல்லவா ஒளிந்து கொண்டிருந்தார்!



## 25 குறிப்புப் புத்தகம்

குதிரைகளுக்கு லாடம் அடிப்பதுதான் அவரது தொழில். அந்தத் தொழிலில் அவருக்குக் கிடைத்த வருமானம் மிகக் குறைவு. அந்த வருமானத்தைக் கொண்டு அவரால் தம்முடைய மகனை அதிகமாகப் படிக்கவைக்க முடியவில்லை. அதனால் பதின்மூன்றுவது வயதிலேயே அவனது படிப்பை அவர் நிறுத்தி விட்டார்.

பள்ளிக்கூடத்தை விட்டதும், அந்தப் பையன் ஒரு புத்தகக் கடையில் வேலைக்குச் சேர்ந்தான். காலையில் வந்ததும் தரையைக் கூட்டிச் சுத்தம் செய்வது, ஜன்னல்களைத் துடைப்பது, பத்திரிகைகளைக் கொண்டு போய் வாடிக்கைக்காரர்களுக்குக் கொடுப்பது முதலிய சில்லறை வேலைகளை ஆரம்பத்தில் செய்து வந்தான். பிறகு, புத்தகங்களை எப்படி 'பைண்ட்' செய்வது என்பதைக் கற்றுக் கொண்டான்.

'பைண்ட்' செய்வதற்கு அங்கே அடிக்கடி விஞ்ஞானப் புத்தகங்கள் வரும். அந்தப் புத்தகங்களில் ஒன்றிரண்டை அவன் படித்துப் பார்த்தான். உடனே அவனுக்கு விஞ்ஞானத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. அங்கே வரும் விஞ்ஞானப் புத்தகங்களையெல்லாம் ஆர்வத்தோடு படிப்பான். படிப்பதோடு நிற்பதில்லை; அவற்றில் காணப்படும் சில முக்கியமான பகுதிகளையெல்லாம் தனித் தனித் தாள்களில் குறித்தும் வைத்துக் கொள்வான்.

மேலும், அந்த நகரில் நடக்கும் விஞ்ஞானக் கூட்டங்களுக்கெல்லாம் தவறாமல் போவான். அந்தக் கூட்டங்களில் பெரிய பெரிய விஞ்ஞானிகள் பேசுவார்கள். ஆனாலும் அவர்களுடைய பேச்சுக்களை இலவசமாகக் கேட்க முடியாது. ஒரு ஷில்லிங் (சுமார் முக்கால் ரூபாய்) கொடுத்து 'டிக்கெட்' பெறவேண்டும்! கையில் கிடைக்கும் காசுகளையெல்லாம்

சேர்த்துவைத்து இது போன்ற கூட்டங்களுக்கே அவன் செலவிடுவான். அந்த விஞ்ஞானிகள் பேசுவதையும் கேட்டுக் குறிப்பு எடுத்து வைத்துக் கொள்வான். இப்படி அவன் எடுத்த குறிப்புக்களை யெல்லாம் அவனே சொந்த மாக 'பைண்ட்' செய்து வைத்திருந்தான்.

அவனுடைய கையெழுத்தின் அழகையும், 'பைண்ட்' செய்யும் திறமையையும் இன்றும் லண்டனிலுள்ள 'ராயல் இன்ஸ்டிட்யூஷன்' புத்தக சாலையில் காணலாம். 150 ஆண்டு களுக்கு முன்பு அந்தப் பையன், தானே எழுதி, பைண்ட் செய்த அந்தப் புத்தகங்கள் அங்கே வைக்கப்பட்டிருக்கின்றன. அந்தப் புத்தகங்கங்களுக்கு ஏன் அவ்வளவு மதிப்புக் கொடுக்கவேண்டும்?

'காந்த சக்தியிலிருந்து மின்சார சக்தியை உண்டாக்க முடியும்' என்ற உண்மையைக் கண்டுபிடித்த மிகப் பெரிய விஞ்ஞானியாகிய **மைக்கேல் ஃபாரடே** தயார் செய்தவையே அந்தப் புத்தகங்கள்! அதனால் தான் அவற்றிற்கு அவ்வளவு மதிப்பு! ஃபாரடே இல்லாவிடில் 'டைனமோ' என்கிறோமே, அதைப் பார்க்க முடியுமா? டைனமோவால் தினமும் எத்தனை இயந்திரங்கள், எத்தனை கருவிகள் வேலை செய்கின்றன!.



## 26 தம்பியின் கட்டுரை

அண்ணன் சொந்தமாக ஒரு பத்திரிகை நடத்திவந்தார்; சொந்தமாக ஓர் அச்சகமும் வைத்திருந்தார். அங்கேதான் அவருடைய சொந்தத் தம்பி ஒருவனும் வேலைபார்த்து வந்தான். எழுத்துக்கோப்பது, அச்சடிப்பது, பத்திரிகையை வீட்டுக்கு வீடு கொண்டு போய்ப் போடுவது—இப்படிப்பட்ட வேலைகளையெல்லாம் அந்தத் தம்பி செய்து வந்தான்.

அவனுக்கு நிறையப் படிக்கவேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. நிறையப் படிக்கப் படிக்கத் தானும் ஓர் எழுத்தாளனாக வேண்டும் என்ற ஆசை தோன்றியது. மனத்தில் தோன்றியதை யெல்லாம் எழுதினான். எழுதியதை யெல்லாம் பத்திரிகைகளில் வெளியிட விரும்பினான். 'அண்ணனிடம் கட்டுரைகளைக் கொடுத்தால் அவர் வெளியிடுவாரா?' என்ற சந்தேகம் அவனுக்குத் தோன்றியது. என்ன செய்வது என்று யோசித்தான், கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான்.

ஒரு நாள் இரவு, தான் எழுதிய ஒரு கட்டுரையை எடுத்துக் கொண்டு வீட்டை விட்டுப் புறப்பட்டான். நேராக அச்சகத்தை அடைந்தான். தெருப் பக்கமாக இருந்த ஜன்னல் வழியாக ஆசிரியரின் அறைக்குள் கட்டுரையைப் போட்டுவிட்டு வீடு திரும்பினான். இதை அப்போது எவருமே பார்க்கவில்லை.

மறுநாள் காலையில் ஆசிரியரான அண்ணன், அறைக்குள் நுழைந்தார். கீழே ஒரு காகிதக் கற்றை கிடப்பதைக் கண்டார். உடனே குனிந்து அதை எடுத்தார்; படித்துப் பார்த்தார். கட்டுரை மிகவும் நன்றாக இருந்தது. எழுதியவர் யார் என்று பார்த்தார். பெயரைக் காணோம்! திருப்பித் திருப்பிப் பார்த்தார். பயனில்லை. உடனே, அந்தக் கட்டுரையைத் தம்முடைய நண்பர்களிடம் காட்டினார். எல்லாரும் அதை மிக மிகப் பாராட்டினார்கள். பத்திரிகை-

யில் உடனே வெளியிட வேண்டும் என்றும் சொன்னார்கள். அவர்கள் சொன்னபடியே அண்ணன் செய்தார்.

தம்பி இப்படியே பல கட்டுரைகளை எழுதி எவருக்கும் தெரியாமல், அறைக்குள் போட்டு வந்தான். எல்லாமே அச்சில் வந்தன. ஆனாலும், எழுதியவர் யார் என்று மட்டும் அவர்களுக்குத் தெரியவில்லை. 'புகழை விரும்பாத ஓர் அறிஞர்தான் இப்படிச் செய்து வருகிறார்' என்று நினைத்தார்கள்.

ஆனால், எவ்வளவு நாட்களுக்குத்தான் இது இரகசியமாகவே இருக்க முடியும்? ஒரு நாள் அம்பலமாகி விட்டது! உண்மை தெரிந்ததும், எல்லாரும் தம்பியைப் பாராட்டினார்கள். அதே தம்பி பிற்காலத்தில் ஒரு சிறந்த பத்திரிகை ஆசிரியனாக விளங்கினான்!

அரசியல், கலை, விஞ்ஞானம், வேதாந்தம், பொருளாதாரம் முதலிய எல்லாவற்றிலும் அவன் நிபுணனாக விளங்கினான். அப்படியானால் அவன் பெயர் எல்லாருக்கும் தெரிந்திருக்க வேண்டுமே! ஆம், நன்றாகத் தெரிந்துதான் இருக்கிறது. **பெஞ்சமின் ஃபிராங்க்ளின்** என்றால், அமெரிக்காவில் சிறு குழந்தைகளுக்குக்கூடத் தெரியும். ஃபிராங்க்ளின் கண்டுபிடித்த 'இடிதாங்கி'யால்தான் இன்று பெரிய பெரிய கட்டடங்களெல்லாம் இடியினால் சேதமாகாமல் நிமிர்ந்து நிற்கின்றன!



## 27 நல்ல தோழி

அந்தச் சிறுமிக்கு வயது ஏழு இருக்கும். அவள் ஆடிப் பாடிக்கொண்டே வீட்டைவிட்டுக் கிளம்பினுள்; அடுத்த வீட்டை நோக்கி ஓடினுள்; அந்த வீட்டுக்குள் நுழைந்ததும், அங்கே விருந்தினராக வந்திருந்த ஒரு சீமாட்டியைக் கண்டாள்.

சீமாட்டியும் சிறுமியைப் பார்த்தாள். உடனே அவளை அன்போடு அருகில் அழைத்தாள். சிறிது நேரம் அவளுடன் பேசிப் பார்த்தாள். அவளுக்கு அச்சிறுமியை மிகவும் பிடித்து விட்டது.

உடனே அச்சிறுமியிடம், ''நீ என் வீட்டுக்கு வருகிருயா? என் வீட்டிலேயே நீ இருக்கலாம். அங்கே உன்னைப் போலவே ஒரு பெண் இருக்கிருள். இருவரும் ஆனந்தமாக ஆடலாம்; பாடலாம். உனக்கு வேண்டியதையெல்லாம் நான் வாங்கித் தருவேன். என்ன, வருகிருயா?'' என்று கேட்டாள் சீமாட்டி.

சிறுமி கொஞ்சம் தயங்கினுள். பிறகு, ''அம்மா என்ன சொல்லுவாளோ...'' என்று இழுத்தாள்.

''வா, உன் அம்மாவைக் கேட்போம். அம்மா ஒத்துக் கொண்டால், நீ கட்டாயம் என் வீட்டுக்கு வந்து விட வேண்டும், சரிதாஞ?'' என்று கேட்டுக்கொண்டே அந்தச் சிறுமியை அவளுடைய வீட்டுக்கு அழைத்துச் சென்ருள் சீமாட்டி.

சிறுமியின் அம்மாவிடம், ''அம்மா, நான் என் சொந்தக்காரப் பெண் ஒருத்தியை சுவீகாரம் எடுத்து வளர்த்து வருகிறேன், அவளுடன் சேர்ந்து படிக்கவும், விளையாடவும் உங்கள் பெண் இருந்தால் நன்ருயிருக்கும். இவளை நான் ஒரு குறையுமில்லாமல் வளர்த்து வருவேன். என்னுேடு இவளை அனுப்பி வைப்பீர்களா?'' என்று கேட்டாள் சீமாட்டி.

அம்மா முதலில் தயங்கினாள். சிறிது நேரம் யோசனை செய்தாள். பிறகு, ''நாமோ ஏழை. நம் வீட்டில் இருந்தால் சாப்பாட்டுக்குக்கூட இவள் கஷ்டப்பட வேண்டும். சீமாட்டி வீட்டுக்குச் சென்றாலாவது சீராக வாழலாம்' என்று நினைத்து, ''சரி உங்கள் விருப்பம் போல் செய்யுங்கள்'' என்றாள்.

சீமாட்டி அந்தச் சிறுமியை வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். தன்னுடைய சுவிகாரப் புதல்விக்கு அவளைத் தோழியாக்கினாள். இருவருக்கும் சீமாட்டியே நல்ல முறையில் படிப்புச் சொல்லிக்கொடுத்தாள். அயல்நாடுகளுக்கும் அவர்களை அழைத்துச் சென்றாள். இவற்றால் அந்தச் சிறுமியின் அறிவும் அனுபவமும் வளர்ந்தன. பிறருக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற நல்ல நோக்கமும் தோன்றியது,

அவள் பிறந்ததும் வளர்ந்ததும், அதிகமான ஆண்டுகள் வாழ்ந்ததும் ஐரோப்பாவில்தான். ஆனாலும், அவள் அதிகமாகத் தொண்டு செய்தது நம் இந்தியாவில்தான்! ஆம், அவள் நமது தேச விடுதலைக்காகப் பாடுபட்டாள்; சிறைக்குச் சென்றாள்; அகில இந்தியக் காங்கிரஸின் தலைவியாகவும் விளங்கினாள். சென்னை அடையாற்றில் இருக்கிறதே பிரம்ம ஞான சபை, அதற்கு உலகம் முழுவதும் பல கிளைச் சங்கங்கள் இருக்கின்றன. அதன் தலைவியாக இருந்து இருபத்தாறு ஆண்டுகள் இடைவிடாமல் தொண்டாற்றியிருக்கிறாள். இப்போது அவள் யாரென்பது உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அவள்தான் 'அன்னை வசந்தை' என்று நாமெல்லாம் அன்போடு அழைக்கும் **டாக்டர் அன்னி பெஸண்ட்.**



# 28 பன்றியின் விலை

சீன தேசத்தில் ஒரு குடும்பம் இருந்தது. அந்தக் குடும்பத்தின் தலைவர் ஒரு விவசாயி. அவர் ஒரு காலத்தில் ஏழையாக இருந்தார். பட்டாளத்தில் சேர்ந்து பல ஆண்டுகள் வேலைசெய்த பிறகு, கையில் கொஞ்சம் பணம் சேர்ந்தது. அதனால் கொஞ்சம் வசதியாக வாழமுடிந்தது.

அந்த விவசாயிக்கு ஒரு மகன் இருந்தான். அவன் தினமும் பள்ளிக்குச் சென்று படித்து வருவான். படிக்கும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் அவன் வயலுக்குச் சென்று வேலை பார்ப்பான். மிகவும் உற்சாகமாகவும், சுறுசுறுப்போடும் அவன் வயல் வேலைகளைச் செய்வான்.

ஒருநாள், அவன் அப்பா, ஓர் ஏழைக் குடியானவன் வீட்டுக்குச் சென்றிருந்தார். அந்தக் குடியானவனிடம் ஒரு பன்றி இருந்தது. அதை வாங்க வேண்டுமென்று நினைத்தார். உடனே விலை பேசினார். விலை முடிவானதும், அவர் குடியானவனிடம் பணத்தைக் கொடுத்தார். ஆனால், அப்போதே பன்றியைக் கொண்டு செல்லவில்லை. ''பன்றி இங்கே இருக்கட்டும். நான் ஆள் அனுப்புகிறேன். அவனிடம் பன்றியைக் கொடுத்தனுப்பு'' என்று கூறி விட்டுச் சென்றார்.

அன்றைக்கோ அல்லது மறுநாளோ அவர் ஆள் அனுப்பவில்லை. பதினைந்து நாட்கள் சென்ற பிறகே தம்முடைய மகனை அந்தக் குடியானவன் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். அந்தப் பையன் குடியானவனிடம் சென்று பன்றியைத் தரும்படி கேட்டான். அதற்கு அந்தக் குடியானவன், ''தம்பி, இந்தப் பன்றியை உன் அப்பா உடனே கொண்டு போகாமல், பதினைந்து நாட்கள் என்னிடமே விட்டுச் சென்றதால் இந்தப் பதினைந்து நாட்களும் நான் இதற்குத் தீனி போட்டு வளர்த்திருக்கிறேன். அத்துடன் பன்றி விலையும் அன்று இருந்ததைவிட இன்று அதிகமாகிவிட்டது. ஆகை

யால், பேசிய தொகைபோக மேற்கொண்டு ஏதாவது தரவேண்டும்'' என்றான்.

பையன் யோசித்துப் பார்த்தான். குடியானவன் கூறுவதிலே நியாயமிருக்கிறது என்பதை உணர்ந்தான். ''ஆம், நீங்கள் கூறுவது சரிதான். நான் இப்போதே அப்பாவிடம் சென்று இதைக் கூறிப் பணம் வாங்கி வருகிறேன். அதுவரை பன்றி இங்கேயே இருக்கட்டும்'' என்று சொல்லிவிட்டு வீட்டை நோக்கி ஓடினான்,

அப்பாவிடம் நியாயத்தை எடுத்துக் கூறி, மேலும் கொஞ்சம் பணம் வாங்கிவந்து, குடியானவனிடம் கொடுத்தான். பிறகு, பன்றியை அழைத்துக்கொண்டு வீடு சென்றான்.

அதே சிறுவன் பிற்காலத்தில் சீனக் குடியரசின் தலைவராகி விட்டான்! பெயர் **மா-சே-துங்!**



## 29 பையனா, பெண்ணா?

இத்தாலி தேசத்திலே ஒரு வைத்தியக் கல்லூரி. அதில் சேருவதற்கு மனுக்கள் வந்து கொண்டிருந்தன. ஒவ்வொரு மனுவாகப் படித்துக்கொண்டு வந்தார்கள். ஒரு மனுவைப் படித்ததும், கீழே கையெழுத்திட்டிருப்பவர் யார் என்று பார்த்தார்கள். அந்தப் பெயரைக் கண்டதும், ''இது யார்? பெயரைப் பார்த்தால் ஒரு பெண் போலல்லவா இருக்கிறது!'' என்று சந்தேகப்பட்டார்கள்.

அவர்களுடைய சந்தேகத்திற்குக் காரணம் அந்த வைத்தியக் கல்லூரியில் அதுவரை ஒரு பெண்கூடப் படிப்பதற்கு முன் வந்ததில்லை.

சிறிது நேரம் யோசித்தார்கள். பிறகு, 'இது பெண் பெயராக இருக்காது; எவனோ ஒரு பையன் தான் இப்படிப் பெயர் வைத்துக் கொண்டிருக்கிறான்' என்று முடிவு கட்டினார்கள் கல்லூரியில் சேர்த்துக்கொண்டதாக உடனே தகவலும் அனுப்பினார்கள்.

கல்லூரி திறக்கும் தினத்தன்று பணம் கட்டுவதற்கு வரிசையாக மாணவர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுடன் ஒரு பெண்ணும் நின்றாள். அவளைப் பார்த்ததும் எல்லாருக்கும் ஒரே அதிசயமாக இருந்தது. ''என்ன இது, டாக்டர் படிப்பு படிப்பதற்கு ஒரு பெண்கூட வந்திருக்கிறாளே!' என்றுதான் ஆச்சரியப்பட்டார்கள்.

அந்தப் பெண் கல்லூரியில் சேர்ந்தாள்; கருத்துடன் படித்தாள்; டாக்டர் பட்டமும் பெற்றுவிட்டாள், ரோம் சர்வகலாசாலையில் முதல்முதலாக டாக்டர் பட்டம் பெற்ற பெண் அவள்தான்!

பட்டம் பெற்றதும் அவள் டாக்டர் தொழிலில் இறங்கினாள். நல்ல பெயரெடுத்தாள். டாக்டர் தொழில்

செய்யும்போதே, அவள் அடிக்கடி ஏழைகள் வீடுகளுக்குச் செல்லுவாள். அங்குள்ள குழந்தைகளுக்கு இலவசமாகப் படிப்புச் சொல்லிக் கொடுப்பாள். அத்துடன் குழந்தைகளின் கல்வி முறையிலும் ஆர்வம் காட்டி வந்தாள். குழந்தைகளின் மனோ தத்துவத்தையும் நன்ருக ஆராய்ந்தாள்.

'குழந்தைகளின் கல்வி, செயலோடு ஒட்டியதாக இருக்க வேண்டும். கதைபோலக் கற்பதுதான் கல்வி. குழந்தைகள் தாமாக மனம் இசைந்து கற்பதே கல்வி. இக்கல்வியால் குழந்தைகளின் குண விசேஷங்கள் வளர்கின்றன. தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் திறமையும் வளர்கிறது'.

இந்த முடிவுக்குத் தக்கபடி அவள் ஒரு புதிய கல்வித் திட்டத்தை வகுத்தாள். அந்தத் திட்டத்தை உலகம் முழுவதும் அறிந்தது. தற்போது பல நாடுகளில் அந்தத் திட்டப்படி பல பள்ளிகள் நடைபெறுகின்றன.

அந்தத் திட்டத்தின் பெயரைச் சொன்னால், அந்தப் பெண் டாக்டர் பெயரும் உங்களுக்குத் தெரிந்துவிடும். 'மாண்டிசோரி கல்வித் திட்டம்' என்பதுதான் அதன் பெயர். இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்குமே, அந்த டாக்டர் பெயர் **மரியா மாண்டிசோரி** அம்மையார்தான் என்பது!

இரண்டாவது மகாயுத்தம் நடந்தபோது அந்த அம்மையார் சென்னை அடையாற்றில் தங்கித் தொண்டு செய்து வந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.



## 30 நீல நிறம்

அந்தப் பையனின் பெயர் ராஜகோபாலன். சிறு வயதிலேயே ராஜகோபாலன் மிகவும் கெட்டிக்காரனு-யிருந்தான். அவனுடைய அப்பா அவனுக்கு அடிக்கடி காசு கொடுப்பார். அந்தக் காசை அவன் வீணுகச் செலவழிக்க மாட்டான். பலகாரம்கூட வாங்கிச் சாப்பிடமாட்டான். நல்ல நல்ல புத்தகங்களாக வாங்கிப் படிப்பான். எந்தப் புத்தகத்தைப் படித்தாலும், உடனேயே அதில் உள்ள நல்ல விஷயங்களை மனத்திலே பதிய வைத்துக் கொள்வான். எவ்வளவு நாட்கள் ஆனுலும், மறக்கமாட்டான்.

சிறுவயதிலேயே புத்தகம் படிப்பதில் ஆர்வமும் நல்ல ஞாபக சக்தியும் இருந்ததோடு, புத்திகூர்மையும் ராஜ கோபாலனுக்கு அதிகமாயிருந்தது.

ராஜகோபாலன் வாலிபனுகி சென்னையிலுள்ள சட்டக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, கடற்கரைக்குப் பக்கத்திலுள்ள ஒரு மாணவர் விடுதியில் தங்கியிருந்தான். ஒரு நாள் அந்த விடுதிக்கு சுவாமி விவேகானந்தர் வந்திருந் தார். அவர் விடுதியைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வரும் போது, ராஜகோபாலன் இருந்த அறைக்குள் நுழைந்தார். அந்த அறைச் சுவரில் கிருஷ்ணபகவானின் படம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. அது ஒரு வர்ணப் படம். அதில் கிருஷ்ண பகவானுடைய உடல் நீல வர்ணத்தில் தீட்டப் பட்டிருந்தது.

அதைப் பார்த்ததும் விவேகானந்தர் ராஜகோபாலனைப் பார்த்து, "கிருஷ்ணபகவானின் உடல் நீல நிறத்தில் இருக் கிறதே, காரணம் தெரியுமா?" என்று கேட்டார்.

உடனே ராஜகோபாலன், ஜன்னல் வழியாகத் தெரிந்த கடலையும், ஆகாயத்தையும் காட்டி, "ஆகாயம் நீலமாக இருக்கிறது. கடலும் நீலமாக இருக்கிறது! இரண்டும்

எல்லையில்லாது விரிந்து கிடக்கின்றன, அதேபோல் கிருஷ்ண பகவானும் எல்லையில்லாது எங்கும் வியாபித்துள்ளான் என்பதைக் காட்டவே நீலநிறம் கொடுக்கப்பட்டிருக்கிறது.'' என்ருன்.

இந்த அருமையான பதிலைக் கேட்டதும் விவேகானந்தர் மிகவும் வியப்படைந்தார்: ராஜகோபாலனை மனமாரப் பாராட்டினர்.

சிறு பையனுக இருந்தபோதுதான் அவனை 'ராஜகோபாலன்', 'ராஜகோபாலன்' என்று அழைத்தார்கள். ஆனல் இப்போதும் அதே பெயரைச் சொல்லியா நாம் அழைக்கிறேம்? இல்லையே! ராஜகோபாலன் என்ற பெயர் மறந்து கூடப்போய்விட்டதே! **ராஜாஜி** என்றல்லவா மிகவும் மரியாதையாக, அன்பாக அழைக்கிறேம்!

சுதந்திர இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக விளங்கிய ராஜாஜி, ஆங்கிலேயரிடமிருந்து நாம் விடுதலை அடையவும், கள்ளை ஒழிக்கவும், தீண்டாமையை அகற்றவும் எவ்வளவு தூரம் பாடுபட்டிருக்கிருர்! அவர் எழுதிய 'வியாசர் விருந்து', சக்கரவர்த்தித் திருமகன்', 'கற்பனைக்காடு' போன்ற பல அற்புதமான புத்தகங்களையெல்லாம் நாம் அவசியம் படிக்கவேண்டுமல்லவா?

# 31 பதின்மூன்று வயதில் பி. ஏ.

ஒரு சிறு பையன். அவனுக்கு வயது பதின்மூன்றுதான் இருக்கும். அவன் நன்றாக வளர்ந்திருக்கவும் இல்லை; திடகாத்திரமாகவும் இல்லை: குள்ளமாக மெலிவாக இருந்தான்.

அந்த வயதில் அவன் எட்டாவது அல்லது ஒன்பதாவது வகுப்பில் படிப்பதாகவே எல்லாரும் எண்ணுவார்கள். ஆனால், அவன் எட்டாவது ஒன்பதாவது வகுப்புக்களை யெல்லாம் எப்போதோ கடந்து விட்டான். அப்படியானால், அவன் எஸ். எஸ். எல். ஸி. படிக்கிறானோ? இல்லை. அதையும் கடந்து, 'இண்டர்மீடியட்' வகுப்பையும் கடந்து பி.ஏ. வகுப்புக்கு வந்து விட்டான். ஆம், அவன் சென்னை மாநிலக் கல்லூரியில் (பிரஸிடென்ஸி காலேஜ்) பி. ஏ. வகுப்பில் சேர்ந்து விட்டான்.

அன்று அக்கல்லூரியின் ஆங்கிலப் பேராசிரியராயிருந்த எலியட் என்பவர் பி. ஏ. வகுப்பிற்குள் வந்தார். இடத்தில் போய் உட்கார்ந்ததும், வகுப்பை ஒரு பார்வை பார்த்தார். அப்போது அவருடைய கண்களில் அந்தப் பதின்மூன்று வயதுப் பையன் தென்பட்டான். உடனே அவர், 'யாரது இந்தப் பொடியன்? தவறுதலாக இங்கே வந்துவிட்டானோ!' என்று சந்தேகப்பட்டார்.

பிறகு அந்தப் பையனைப் பார்த்து, ''ஏனப்பா, நீ யார்? இங்கே எதற்காக வந்தாய்?'' என்று கேட்டார்.

''நான் இந்த வகுப்பில்தான் சார் படிக்கிறேன்'' என்றான் அந்தப் பையன்.

''என்ன, இந்த வகுப்பிலே படிக்கிறாயா! உனக்கு என்ன வயது?''

''பதின்மூன்று சார்.''

''பதின்மூன்றா! சரி, நீ 'இன்டர்' எங்கே படித்தாய்?''

''வால்டயரில் சார்.''

''உன் பெயர் என்ன?''

''ராமன் சார்.''

இவற்றைக் கேட்டதும், அந்தப் பேராசிரியர் மிகவும் ஆச்சரியப்பட்டார். அவர் மட்டுந்தானா ஆச்சரியப் பட்டார்? எல்லாருமே ஆச்சரியப்பட்டார்கள். அன்று முதல் ஆசிரியர்கள் யாவரும் அவனிடத்திலே அதிகமாக அன்பு காட்டினார்கள். அவன் விஷயத்தில் மிகவும் அக்கறை செலுத்தினார்கள்.

இப்படி, தனது பதின்மூன்றாவது வயதிலே எல்லா ருடைய உள்ளத்தையும் கவர்ந்த அந்த ராமன் யார்? வேறு யாருமல்ல; நோபல் பரிசு பெற்ற நம் தமிழ் நாட்டு விஞ்ஞானி **சர். சி.வி. ராமனேதான்!**



## 32 எட்டுக் கேள்விகள்

பள்ளியில் பரீட்சை நடந்து கொண்டிருந்தது. கேள்வித் தாளில் மொத்தம் எட்டுக் கேள்விகள் இருந்தன. அவற்றில் நான்கு கேள்விகளுக்கு மட்டுமே விடை எழுதினால் போதும் என்று ஆரம்பத்தில் கூறப்பட்டிருந்தது. ஆனாலும், அந்த எட்டுக் கேள்விகளுமே கடினமான கேள்விகள். அதனால், கேள்வித் தாளைப் பார்த்ததும் அங்கிருந்த மாணவர்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர்கள் எதிர்பார்த்த கேள்வி களில் ஒன்றுகூட வரவில்லை. கேள்வித் தாளைப் பார்த்துப் பார்த்து அவர்கள் திகைத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களில் மிகவும் கெட்டிக்கார மாணவன் ஒருவன் இருந்தான். அவனும் கேள்வித்தாளைப் பார்த்து விழித்துக் கொண்டுதான் இருந்தான். 'கேள்விகள் இவ்வளவு கடின மாக இருக்கின்றனவே! எப்படிப் பதில் எழுதுவது?' என்று எண்ணி அவன் விழிக்கவில்லை; 'இந்த எட்டுக் கேள்விகளில் நான்கு கேள்விகளுக்கு மட்டும்தானே விடை கேட்டிருக்கி றார்கள்? எந்த நான்கிற்கு விடை எழுதுவது?' என்று தெரியாமல்தான் அவன் விழித்தான்!

சிறிது நேரம் இப்படி யோசனை செய்தான். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தான். 'விறுவிறு' என்று விடை எழுத ஆரம்பித்தான். அந்த எட்டுக் கேள்விகளுக்குமே விடை எழுதிவிட்டான். விடைகளின் அடியிலே ஒரு குறிப்பையும் எழுதிவைத்தான்.

"ஐயா, பரீட்சை அதிகாரி அவர்களே, எட்டுக் கேள்வி களுக்குமே விடை எழுதிவிட்டேன். ஏதேனும் நான்கு விடைகளுக்கு 'மார்க்' போட்டால் போதும்" என்றுதான் எழுதியிருந்தான்.

பரீட்சை அதிகாரி அவனது விடைகளைப் படித்துப் பார்த்தார், குறிப்பையும் படித்துப் பார்த்தார். அவருக்கு

ஒரே திகைப்பாக இருந்தது. ''எந்த நான்கு விடைகளுக்கு மார்க் போடுவது?'' என்றே அவருக்குப் புரியவில்லை! ஏன் தெரியுமா? அவன் எழுதியிருந்த அந்த எட்டு விடைகளுமே மணி மணியாக இருந்தன!

இவ்வளவு தூரம் கெட்டிக்காரனாக இருந்த அந்த மாணவன் பெரியவனானதும், ஒரு வக்கீலாக விளங்கினான். மாதம் ரூபாய் நாலாயிரம், ஐயாயிரம் சம்பாதித்தான் ஆனாலும், வருமானத்தைப் பெரிதாகக் கருதவில்லை. வக்கீல் தொழிலை உதறித் தள்ளி விட்டுத் தேச விடுதலைக்காகப் பாடுபட்டான். காந்திஜியின் முக்கிய சீடனாக விளங்கினான்! நம் பாரத நாட்டின் முதல் ஜனாதிபதியாகவும் விளங்கினான்!

**பாபு ராஜேந்திர பிரசாத்** என்றால் யாருக்குத்தான் தெரியாது!



## 33 புத்தகப் பிரியன்

அந்தப் பையனுக்குப் புத்தகம் படிப்பதென்றால் அளவு கடந்த ஆசை. ஆனால், அவனிடம் புத்தகம் வாங்கப் பணம் தான் இல்லை. அவனுடைய அப்பா பணக்காரராக இருந்தால், அவன் விரும்பும் புத்தகங்களையெல்லாம் வாங்கிக் கொடுப்பார். ஆனால், அவரோ மிகவும் ஏழை. தச்சு வேலை செய்து வந்தார். அதில் எவ்வளவு வருமானம் கிடைக்கப் போகிறது!

புத்தகம் வாங்கப் பணம் இல்லாததால், அவன் புத்தகம் படிக்கும் ஆசையை விட்டுவிடவில்லை. வெகு தூரம் நடந்து சென்று, நகரத்திலுள்ள சிலரிடம் கெஞ்சிக் கேட்டுச் சில புத்தகங்களை வாங்கி வருவான். படித்துவிட்டுப் பத்திரமாகத் திருப்பிக் கொடுப்பான்.

ஒரு நாள், 'ஜனாதிபதி வாஷிங்டன்' என்ற புத்தகத்தை ஒருவரிடமிருந்து வாங்கி வந்தான். இரவிலே உட்கார்ந்து அதைப் படித்துக்கொண்டே யிருந்தான். படிக்கப் படிக்க அந்தப் புத்தகம் மிகவும் அருமையாக இருந்தது. அமெரிக்கருக்கு விடுதலை வாங்கித் தந்த ஜார்ஜ் வாஷிங்டனின் வாழ்க்கை வரலாறுதான் அந்தப் புத்தகம். வெகு நேரமாகியும் அவன் படிப்பை நிறுத்த வில்லை. ஆனால், விளக்கிலிருந்த எண்ணெய் தீர்ந்து விட்டது. எண்ணெய் இல்லாத போது இரவிலே எப்படிப் படிக்க முடியும்? ஆகையால் புத்தகத்தை ஜன்னல் ஓரமாக வைத்துவிட்டுப் படுத்தான். நன்றாகத் தூங்கிவிட்டான்.

மறுநாள் காலையில் எழுந்ததும், முதல் வேலையாக புத்தகத்தின் அருகே சென்றான். புத்தகத்தைப் பார்த்ததும் அவன் திடுக்கிட்டான். காரணம், இரவு பெய்த மழையில் அந்தப் புத்தகம் நன்றாக நனைந்து போய்விட்டது! 'ஐயோ! புத்தகத்தின் சொந்தக்காரர் என்ன சொல்லுவாரோ? புத்தகம் இப்படிக் கெட்டுப் போய்விட்டதே!' என்று

மிகவும் வருத்தப்பட்டான். உடனே, அந்தப் புத்தகத்தை எடுத்துக்கொண்டு, அதன் சொந்தக்காரரிடம் சென்றான்.

''ஐயா, இந்தப் புத்தகத்தை நான் ஜன்னல் ஓரமாக அஜாக்கிரதையாக வைத்துவிட்டு, நேற்று இரவு தூங்கி விட்டேன். மழையில் இது நன்றாக நனைந்து கெட்டுப்போய் விட்டது. தயவு செய்து மன்னித் தருளவேண்டும்'' என்று பயத்துடன் கூறினான்.

உடனே அவர், ''அதெல்லாம் முடியாது. இந்தப் புத்தகத்தின் விலையை நீ தந்துவிட்டுத்தான் போக வேண்டும். அல்லது, என் வயலில் நீ மூன்று நாட்கள் வேலை செய்யவேண்டும்'' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

''சரி, அப்படியே செய்கிறேன். இந்தப் புத்தகத்தை எனக்கே கொடுத்து விடுங்கள்'' என்றான்.

அவரும் அதற்குச் சம்மதித்தார். அவருடைய வயலிலே மூன்று நாட்களும் அந்தப் பையன் மாடாக உழைத்தான் நான்காவது நாள் அந்தப் புத்தகம் அவனுக்கே சொந்த மாகிவிட்டது. அப்போது அவன் அடைந்த ஆனந்தத்தை அளவிடவே முடியாது.

அமெரிக்க ஜனாதிபதி வாஷிங்டன் வாழ்க்கை வரலாற்றை ஆர்வமுடன் படித்த அந்தப் பையனும் பிற் காலத்தில் அமெரிக்காவின் ஜனாதிபதியாகி விட்டான்! ஆம், அமெரிக்க ஜனாதிபதியாக இருந்து அடிமை வியாபாரத்தை ஒழித்துக் கட்டிய **ஆப்ரஹாம் லிங்கன்** தான் அந்தப் பையன்!



# 34 அறைக்குள் தியானம்

நரேந்திரன்—இதுதான் அந்தச் சிறுவனுக்கு அவனுடைய அப்பா அம்மா வைத்த பெயர். இந்தப் பெயரைச் சொல்லியே எல்லாரும் அவனை அந்தக் காலத்தில் அழைத்து வந்தார்கள்.

ஒருநாள், நரேந்திரன் கடைவீதிக்குச் சென்றான். அப்போது அங்கு ஒரு ராமர் விக்கிரகத்தைக் கண்டான். உடனே அதை விலைகொடுத்து வாங்கி வீட்டுக்குக் கொண்டு வந்தான்.

நரேந்திரனுக்கு மிகவும் வேண்டிய தோழன் ஒருவன் இருந்தான். அவனும் நரேந்திரனும் தினந்தோறும் அந்த விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்து வந்தார்கள்.

ஒருநாள், அவர்கள் இருவரும் அந்த விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு மாடிக்குச் சென்றார்கள். அங்கிருந்த ஓர் அறைக்குள் விக்கிரகத்தை வைத்தார்கள். அறைக் கதவை நன்றாக மூடித் தாழிட்டுவிட்டு விக்கிரகத்தின் எதிரே உட்கார்ந்தார்கள். அலங்காரம், பூஜை எல்லாம் நடத்திய பிறகு இருவரும் கண்களை மூடிக்கொண்டு தியானம் செய்ய ஆரம்பித்தார்கள். வெகு நேரம் ஆகியும், அவர்கள் தியானம் முடிந்து எழுந்திருக்கவில்லை. அப்படியே ஆடாமல்,அசையாமல் உட்கார்ந் திருந்தார்கள்.

நரேந்திரனையும், அவன் தோழனையும் வெகுநேரமாகக் காணாததால் இரு வீட்டாரும் அவர்களைத் தேடஆரம்பித்தார்கள். எங்கெங்கோ தேடினார்கள். அகப்படவில்லை. கடைசியில் மாடிக்கு வந்தார்கள். மாடி அறை தாழிடப் பட்டிருப்பதைக் கண்டதும், பெயர்களைச் சொல்லி அழைத்தார்கள்; பதில் இல்லை. உரக்கக் கூவினார்கள். கதவை 'மடமட' வென்று தட்டினார்கள். அப்போதும் பயனில்லை. கடைசியாக அவர்கள் பலமாகக் கதவை உதைத்துத் தள்ளி

னார்கள். அப்போதுதான் நரேந்திரனின் தோழன் கண் விழித்தான். 'இனிமேல் இங்கிருந்தால் உதை கிடைக்கும்,' என்று நினைத்து அவன் ஓடிப் போய்விட்டான். ஆனால் நரேந்திரனோ அப்படியே ஆடாமல் அசையாமல் அடித்து வைத்த சிலைபோல் உட்கார்ந்திருந்தான்.

'நரேந்திரா! நரேந்திரா!' என்று பலமுறை உரக்கக் கூப்பிட்டுப் பார்த்தார்கள்; அவன் உடம்பைப் பிடித்து அசைத்தார்கள். என்ன செய்தும், அவன் அப்போது கண் விழிக்கவில்லை, வெகு நேரம் சென்ற பிறகே தியானம் கலைந்து கண்களைத் திறந்தான். சுற்றுமுற்றும் பார்த்தான். பெற்றோரும், மற்றோரும் அங்கு நிற்பதைக் கண்டான். அவர்கள் மூலமாக நடந்ததை அறிந்தான்.

இப்படிச் சிறிய வயதில் இருந்த இடத்திலே இருந்து தியானம் செய்த நரேந்திரன், பெரியவனானதும் ஒரே இடத்தில் இருக்கவில்லை; ஊர் ஊராகச் சுற்றினான். உலகின் பல பாகங்களுக்கும் சென்றான். அங்கெல்லாம் இந்து மதத்தின் பெருமையை எடுத்துக்கூறிச் சிறப்புப் பெற்றான். ஆனாலும், 'நரேந்திரன்' என்ற பெயரைச் சொன்னால் உங்களில் சிலருக்குத் தெரியாது. **சுவாமி விவேகானந்தர்** என்று சொன்னால், ''ஓ, அவரா! நன்றாகத் தெரியுமே!'' என்று நீங்கள் எல்லாருமே கூற ஆரம்பித்துவிடுவீர்கள்!



## 35 செடிகளிடம் அன்பு

கல்கத்தாவில் ஓர் ஆங்கிலப் பள்ளிக்கூடம். அந்தப் பள்ளிக்கூடத்திலே ஒரு மாணவன் படித்துவந்தான். அவன் அப்பா கிராமத்திலிருந்து மாதா மாதம் செலவுக்குப் பணம் அனுப்புவார். பள்ளிக்கூடத்துச் சம்பளத்தை அவன் ஒழுங்காகக் கட்டிவிடுவான். சாப்பாட்டுக்காக உள்ள பணத்தில் கொஞ்சம் கொஞ்சமாக மிச்சம் பிடித்து அந்தப் பணத்தில் நாய், முயல், புறு முதலியவற்றை அவன் வாங்குவான். பிரியமாக அவற்றை வளர்ப்பான். அவை எப்படி வசிக்கின்றன, என்னென்ன சாப்பிடுகின்றன என்றெல்லாம் கவனமாகப் பார்ப்பான்.

அவன் வசித்துவந்த இடத்தில் திறந்த வெளி கொஞ்சம் இருந்தது. அதில் அவன் பலவகைச் செடி கொடிகளையும் வளர்த்துவந்தான். அவற்றிற்கு நீர் பாய்ச்ச அவனே சொந்தமாகச் சில குழாய்களை அமைத்தான். நடு நடுவே சில பாலங்களையும் கட்டி வைத்தான். படிக்கும் நேரம் சாப்பிடும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களிலெல்லாம் அவன் தோட்டத்திலே இருப்பான். செடி கொடிகளெல்லாம் எப்படி வளர்ந்து வருகின்றன என்று தினமும் வேடிக்கையாகப் பார்ப்பான்.

அவனுடைய பள்ளித் தோழர்கள் அவனை விளையாடக் கூப்பிடுவார்கள். அவன் போகமாட்டான். தான் வளர்க்கும் நாய், முயல், புறு முதலியவற்றுடனே விளையாடிக் கொண்டிருப்பான். மீன் பிடிப்பதிலும் அவனுக்கு ஆசை அதிகம். மீன் பிடிக்கும் வலை ஒன்றை எடுத்துக் கொள்வான். பக்கத்திலுள்ள குளம் குட்டைகளுக்குச் சென்று மீன் பிடிப்பான். அப்போது அவை துள்ளிக் குதிக்குமல்லவா? 'ஏன் இவை துள்ளிக் குதிக்கின்றன? தண்ணீருக்கும், இவற்றிற்கும் என்ன

சம்பந்தம்? வெளியே இருந்தால் வாழ முடியாதா?' என்றெல்லாம் ஆராய்ச்சி செய்வான்.

விடுமுறைக் காலங்களில் கிராமத்துக்குச் செல்ல வேண்டியிருக்கும். அப்போது, தான் வளர்க்கும் நாய், முயல் முதலியவற்றை ஊருக்குக் கொண்டு செல்வான். ஆனால், செடி கொடிகளை யும் கொண்டு செல்ல முடியுமா? 'ஐயோ, கொண்டு செல்ல முடியவில்லையே! இவை தண்ணீரில்லாமல் வாடிவிடுமே!' என்று வருந்துவான்.

செடி கொடிகளிடத்திலே அப்போது அவன் கொண்டிருந்த அன்புதான், பிற்காலத்தில் அவனை ஒரு பெரிய விஞ்ஞானி ஆக்கியது! ஆம், நம்மைப் போலவே செடி கொடிகளுக்கும் உயிருண்டு, உணர்ச்சியுண்டு என்ற உண்மையைக் கண்டுபிடித்து உலகுக்கு அறிவித்தவனே அந்தச் சிறுவன்தான்!

இப்போது அந்தச் சிறுவன் யாரென்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். **ஜகதீஸ் சந்திர போஸ்** என்று உடனே கூற ஆரம்பித்து விடுவீர்கள்!



# 36 யானைச் சவாரி

அந்தப் பெண்ணுக்கு வயது மூன்றுகூட ஆகவில்லை. அதற்குள் அவளுடைய அம்மா இறந்துவிட்டாள். அப்பா தான் அவளை வளர்த்துவந்தார். அந்த அப்பாவுக்கு அரண்மனையிலே வேலை. அவர் அரண்மனைக்குப் போகும் போதெல்லாம் மகளையும் கூடவே அழைத்துக்கொண்டு போவார். அவள் அரசகுமாரனுடன் சேர்ந்து விளையாடு வாள்.

ஒரு நாள், அரசகுமாரன் ஒரு யானைமேல் ஏறிச் சவாரி செய்து கொண்டிருந்தான். அதைப் பார்த்தாள் அந்தப் பெண். உடனே அவளும் யானைச்சவாரி செய்யவேண்டும் என்று ஆசைப்பட்டாள். அப்பாவிடம், ''அப்பா, அப்பா, என்னையும் யானைமேல் ஏற்றிவிடப்பா'' என்று கெஞ்சினாள்.

''ஐயோ! வேண்டாம். யானைமேல் ஏறினால், யானை என்ன தெரியுமா செய்யும்? தும்பிக்கையால் உன்னை அப்படியே வளைத்துப் பிடித்துத் தூக்கி எறிந்துவிடும்!'' என்றார் அப்பா.

''ராஜகுமாரனை மட்டும் அது தூக்கி எறியாதோ?'' என்று கேட்டாள் அவள்.

''ராஜகுமாரனுக்கும் உனக்கும் வித்தியாசமில்லையா? அவன் ஆண்பிள்ளை. நீ பெண்தானே! உன்னால் யானையை அடக்க முடியுமா?''

''ஏன் முடியாது? அங்குசத்தைக் கழுத்தில் வைத்து அழுத்தினால் யானை அடங்கிவிடுகிறது. அவ்வளவுதானே!''

இதைக் கேட்டதும், 'இவ்வளவு கெட்டிக்காரியாகவும், தைரியசாலியாகவும் நம்முடைய மகள் இருக்கிறாளே!' என்று நினைத்து அப்பா ஆனந்தப்பட்டார். அதுமுதல் அவள் விருப்பம்போல் நடக்க அனுமதித்தார். அவள் ராஜ

குமாரனுடன் சேர்ந்து எல்லா வித்தைகளையும் கற்றுக் கொள்ள ஆரம்பித்தாள். வில்வித்தை, கத்திச் சண்டை, யானையேற்றம், குதிரையேற்றம் எல்லாவற்றையும் எளிதிலே கற்றுக்கொண்டு விட்டாள். அவளுடைய திறமையையும் வீரத்தையும் கண்டு அரச குடும்பத்தாரே ஆச்சரியப்பட்டார்கள்.

ஏழாவது வயதிலே அவளுக்குத் திருமணம் நடந்தது. ஜான்ஸி அரசருக்கு அவளை மணம்செய்து கொடுத்தார்கள். பதினெட்டாவது வயதிலே அவளுடைய கணவர் இறந்து விட்டார். பிறகு அவளே அரசாங்கத்தை நடத்திவந்தாள். அப்போது ஆங்கிலேயர்கள் ஜான்ஸி நாட்டின் மீது படையெடுத்தார்கள். அவள் அஞ்சவில்லை. வீரமுடன் எதிர்த்தாள். எதிரிகளைப் புறமுதுகு காட்டி ஓடும்படி செய்தாள். பலமுறை தோல்வி அடைந்ததால் ஆங்கிலேயரின் ஆத்திரம் அதிகமாகியது. வஞ்சகமாக அவளைக் கொல்ல நினைத்தார்கள். நினைத்தபடியே செய்துவிட்டார்கள்! ஆம், ஒருநாள் போர் நடக்கும்போது அவளின் பின்புறமாக வந்து கத்தியால் அவளைக் குத்திக் கொன்று விட்டான் ஓர் ஆங்கிலேயன்! அப்போது அவளுக்கு வயது இருபத்து இரண்டுதான்!

அந்நியருக்கு அடிமையாகக் கூடாது என்று ஆண்மையுடன் போர்புரிந்து, வீர சுவர்க்கம் அடைந்த அந்தப் பெண்தான் **ஜான்ஸி ராணி** எனப் போற்றப்படும் லெட்சுமி பாய்!



## 37 நாலு விரல் பையன்

''டேய், அவன் காலைப் பாரடா!''

''என்னடாப்பா அவன் காலிலே அதிசயம்?"

''சரியாய்ப் பாரேன். அவன் இடது கால் விரலைப் பார்த்தால் அதிசயம் தானாய்த் தெரிந்துவிடுகிறது!''

'ஆமாண்டா' இது என்ன, அவனுக்கு இடது காலிலே நாலே நாலு விரல்தான் இருக்கிறது! ஒரு விரல் எங்கே போய்விட்டதாம்?''

''எங்கேயும் போகவில்லை. சரியாகப் பார். இரண்டாவது விரலும் மூன்றாவது விரலும் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருப்பது தெரியவில்லையா?''

''அடடே, ஆமாண்டா! நாலு விரல்கள் இருந்தாலும் நடையைப் பார்த்தாயா? எவ்வளவு முறுக்காக நடக்கிறான்!''

தெருவழியாகச் செல்லும் ஒரு சிறுவனைப் பார்த்து இப்படி இரு பையன்கள் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். பாவம், அந்தச் சிறுவன் என்ன செய்வான்? பிறக்கும்போதே அவனுக்கு இடது காலில் நாலு விரல்கள்தான் இருந்தன.

அவன் ஒரு பணக்காரப் பையனாக இருந்தாலும் காலிலே 'பூட்ஸ்' போட்டுக்கொண்டிருப்பான். அந்தக் குறை மற்றவர்களுக்குத் தெரியாமலிருக்கும். ஆனால், அவனோ பரம ஏழை. அவன் அப்பா செருப்புத் தைக்கும் தொழிலைச் செய்து வந்தார். ''அப்பாதான் செருப்புத் தைப்பவர் ஆயிற்றே! ஏன் தம்முடைய மகனுக்கு பூட்ஸ் தைத்துக் கொடுக்கக் கூடாது?'' என்று சிலர் கேட்கலாம். 'பூட்ஸ்' தைப்பதென்றால், முதலில் தோல் வாங்க வேண்டாமா? பணத்திற்கு அவர் என்ன செய்வார்?

'பூட்ஸ்' அணியாமல் வெறும் காலுடன் நடக்கும் அந்தச் சிறுவனை அடிக்கடி அவனுடைய நண்பர்களும் மற்றவர்களும் கேலி செய்துவந்தார்கள். இது அவனுக்கு ஆத்திரமூட்டியது. சில சமயங்களில் அந்த ஆத்திரம் அதிகமாகிவிடும். கோபம் வந்துவிடும். அவர்களை அடித்து நொறுக்கிவிடுவான். எத்தனையோ தடவைகள் 'குஸ்தி' போட்டிருக்கிறான்; வெற்றியும் பெற்றிருக்கிறான்.

அவன் யார்?

அவன்தான் டேவிட்.

அவன் யார் டேவிட்?

டேவிட், கோபா, இவாஜேவிச் என்றெல்லாம் அவனுக்குப் பல பெயர்கள் உண்டு. ஆனாலும், 'இரும்பு மனிதன்' என்று சொன்னால்தான் உங்களுக்குப் புரியும்.

இப்போதும் புரியவில்லையா?

சரி 'இரும்பு மனிதன்' என்பதை ரஷ்யாவில் எப்படி அழைப்பார்கள் என்பதைச் சொன்னால் புரிந்துவிடும்.

**ஸ்டாலின்**

ஸ்டாலின் என்றாலே இரும்பு மனிதன் என்பதுதான் பொருள்.

செருப்புத் தைப்பவரின் மகனாகப் பிறந்து, ரஷ்யா தேசத்திற்கே தலைவராயிருந்த ஸ்டாலின்தான் அந்த நாலு விரல் பையன்!



## 38 கோயில் யானை

''சீமா, சாப்பிட வாப்பா. நேரமாகிறது.''

''முடியாது. மீனாட்சி கோயில் யானை வந்தால்தான் சாப்பிடுவேன்."

''என்ன, மீனாட்சி கோயில் யானை வரவேண்டுமா! சரி, சாப்பிடு. யானை சீக்கிரம் வந்துவிடும்."

''அதெல்லாம் முடியாது. யானை முதலிலே வரட்டும். அப்புறம் நான் சாப்பிடுகிறேன்.''

சீமாவிடம் எவ்வளவோ கூறிப் பார்த்தாள், அவனுடைய அத்தை. ஆனால், அவன் கேட்டால்தானே! சாப்பிடாமலே முரண்டு செய்தான். அதை அறிந்தார் சீமாவின் அப்பா. உடனே அவர், ''டேய், இப்போது சாப்பிடுகிறாயா, அல்லது முதுகிலே இரண்டு போடட்டுமா?'' என்று கோபமாகக் கேட்கவில்லை.

அவருக்கு மகனிடத்திலே பிரியம் அதிகம். அத்துடன் நல்ல செல்வாக்கும் இருந்தது. 'தானப்ப முதலி அக்ரகாரம் சேஷாத்திரி ஐயங்கார்' என்றால் மதுரையிலே அந்தக் காலத்தில் எல்லாருக்கும் தெரியும். ஆகையால், அவர் உடனே தம்முடைய மகனைப் பார்த்து, ''சீமா, அழாதே! உனக்கு யானைதானே வேண்டும்? இதோ கொண்டுவரச் சொல்கிறேன்'' என்று சொன்னார். சொல்லி விட்டுச் சும்மா இருக்கவில்லை. உடனே கோயிலுக்கு ஆள் அனுப்பினார். கொஞ்ச நேரத்தில் சீமா வீட்டு வாசலில் மீனாட்சி கோயில் யானை வந்து நின்றது! யானையைப் பார்த்த பிறகே சீமா சாப்பிட்டான்.

இதேபோல் அந்தச் செல்லப்பிள்ளை சீமா அடிக்கடி பிடிவாதம் செய்வான். ஒரு சமயம் சீமாவை அழைத்துக் கொண்டு அவனுடைய அப்பா சென்னைக்குச் சென்றார். அப்பாவும் மகனும் சென்னையில் மிகவும் புகழ்பெற்றிருந்த வழக்கறிஞரான பாஷ்யம் ஐயங்கார் வீட்டில் தங்கியிருந்தார்கள்.

அப்போது ஒரு நாள் இரவு ஒன்பது மணிக்கு,சீமாவுக்குப் பொம்மை எஞ்ஜின் ஞாபகம் வந்துவிட்டது. உடனே, 'பொம்மை எஞ்ஜின் வேணும்' என்று அழ ஆரம்பித்து விட்டான்.

''இந்த நேரத்தில் பொம்மை எஞ்ஜினுக்கு எங்கே போவது? கடைகளெல்லாம் சாத்தப்பட்டிருக்குமே! நாளைக் காலையில் கட்டாயம் வாங்கித் தருகிறேன்'' என்று அப்பா சமாதானம் கூறினார். ஆனால் அந்தப் பிடிவாதக்காரப் பிள்ளையா கேட்கும்? கடைசியில், பாஷ்யம் ஐயங்கார் அவருக்குத் தெரிந்த ஒரு கடைக்காரருக்கு ஆள் அனுப்பினார். கடைக்காரரைத் தேடிப் பிடித்துக் கடையைத் திறக்கச் செய்து, பொம்மை எஞ்ஜினை வாங்கிக் கொண்டு வந்த பிறகே சீமாவின் அழுகை அடங்கியது.

இவ்வளவு பிடிவாதக்காரனாக இருந்தாலும், சீமாவுக்குப் புத்தி கூர்மை அதிகம். அவனது புத்திசாலித் தனத்தையும், சுறுசுறுப்பையும் கண்டு பாஷ்யம் ஐயங்காரே தம்முடைய பெண்ணை அவனுக்குத் திருமணம் செய்து கொடுத்தார். அப்போது அவனுக்கு வயது 14 தான்!

சீமாவும் மாமனாரைப் போலவே மிகவும் கெட்டிக்கார வழக்கறிஞராகிவிட்டான். ஸ்ரீமான் **எஸ் ஸ்ரீநிவாஸ ஐயங்கார்** என்றால், ''அடேயப்பா, அவர் மிகமிகப் பெரிய வக்கீலாயிற்றே!'' என்று சொல்லுவார்கள். நல்ல புகழும், வருமானமும் அவரைத்தேடி வந்துங்கூட, அவர் வழக்கறிஞர் வேலையை உதறித் தள்ளிவிட்டார். தேச விடுதலைக்காகப் பல வழிகளிலும் தொண்டாற்றினார். அகில இந்தியக் காங்கிரசின் தலைவராகவும் ஓராண்டு இருந்திருக்கிறார்!



## அட்டையில் உள்ளவர்கள்

20. நேருஜி
21. நைட்டிங்கேல்
22. நௌரோஜி
23. பாரதியார்
24. பாரதிதாசன்
25. பாரடே
26. பிராங்க்ளின்
27. பெசன்ட்
28. மா–சே-துங்
29. மாண்டிசோரி
30. ராஜாஜி
31. ராமன், சி. வி.
32. ராஜன் பாபு
33. லிங்கன்
34. விவேகானந்தர்
35. ஜகதீசர்
36. ஜான்ஸி ராணி
37. ஸ்டாலின்
38. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், எஸ்.

ஓவியர் : சாகர்

